யும் சத்தியும் இவ்விரண்டும் கூடினயுத்தி இது. ...றபேரிஞ்சி - *பொன் அறுவதல்ல ; விசும்பற விசை அறுகையென்றவா...த்து நூறுயோசனை *இராமனால் வடக்குநோக்கிப்போகவிட்டகுரங்கு இவ்...க்கு ஒருகாதில் கிற்றில்லையென்னும் பொருள் இது. (கஉஅ)

365. பேர்த்துநின்ற வயிற்றின் பெருவெளித்
தூர்த்துநின்ற விசும்பெதிர் தோன்றவே.

ஆகாசத்து மிடைந்துநின்ற தேவர்கள்சரீரங்களை அவ்விடத்தினின்... றும் வாங்கித்தின்று தங்கள்வயிற்றில் ஒன்றுமின்றி வெளியாகக்கிடந்த பெரும்பாழ்களை அடைத்தன ; அடைத்தபின்னை முன்புதோன்றுதேநின்ற ஆகாசம் இவையிற்றிற்கு எதிராய்த்தோன்றிற்று.

இவர்கள் பரோதரர்; ஆகாசம்வயிறெனப்படும் விதூஷகதூஷண நாதரென்றறிக. இது தந்திரயுத்தி ; எச்சமன்று. (கஉக)

366. வருதரைக்குன்று வாழுங் குழிவழி
நிருதரைப்புக நூக்கி நிரப்பியே.

வருநிருதரையெனக்கூட்டுக. தரைக்குன்றுவாழுங் குழி யென்றது பறக்குங்குன்றுகளை நினைத்தெனவுணர்க. குழிநிரப்புகையாவது முன்னிற் பாட்டில்ஆகாசத்தை ஆக்கினதுபோல இங்கும் பூமியை ஆக்குகை. மலைக் குச் சமானர் அசுரரெனவுணர்க. (கஉஉ)

வேறு.

367. ஓதமும் பொருப்புமண்ணும் விண்ணுமற்று முள்ளவெப்
பூதமுந் த்ரி சூலமிட் டுடன்கலந்து போதவே.

திரிசூலமென்றது ஒருகழுவல்லவென்பது. சூலம் - கழு. ஓதம் - சல சாதி. பொருப்பு - பருவதசாதி. மண் - பசு பட்சி நர மிருகசாதி. விண்- தேவ தானவ தைத்திய சித்த வித்தியாதர யட்ச கந்தருவ கின்னர கிம் புருஷ கருடாதியான தேவயோனி. மற்றுமுள்ள எப்பூதமாவன, சக் கரவாளத்துக்கு அப்பாலுள்ள மிலேச்சகண்டங்களில் கொலைகடியாவாய்ப் புண்ணியமென்பதையறியாத பிராணிசாலங்களெல்லாம்.

எல்லார்தோள்களிலும் திரிசூலம் இடப்பட்டன.

போத இட்டு என்க. (கஉ௩)

368. வெம்மையே புரிந்தபே ரலாயுதத்தர் வெள்ளையோர்
தம்மையே யுரித்தமைத்த சட்டைமெய் தயங்கவே.

---

* இச்செய்தி உலகத்தில் எங்கும் வழங்குகின்றது.

அலாயுதம் - கலப்பைப்படை. * வெள்ளையோர் - பலதேவர்; இவர்கள் அநந்தருளர், பிரவிதோறும். (கஉச)

369. துற்றெழுந் பேய்நிரை துளங்குதம் முடம்புவிட்
டற்றெ ந்த தோன்முழுச் சளம்பமீ தலம்பவே.

துர - உண்டு.

ண்டுமெலிந்திருத்தலின் அற்றதோல் உண்டலால் நிறம்பெற்று ந்து பருத்துச் சளம்பச்சட்டை இட்டனபோன்றன. (கஉரு)

370. மலைப்பிடித்த சீயவே றுடன்பிணைத்து வாரிநீர்
அலைப்பிடித்த மீனவேறு பெய்தகா தலைப்பவே.

மலைப்பிடித்த - மலைக்கட்பிடித்த. சீயவேறு - இராசசிங்கம். அலைப்பிடித்த - கடலுட்பிடித்த; ஏழாம்வேற்றுமைத் தொகை. மீனவேறு - ஆண்மீன்; ஏறு - சுறு; கொம்புடைமகரம்.

இவை † இரண்டுசாதியையும் ஒன்றுகப்பிடித்துத் தூங்கக் காதுகளில் இட்டனவென்பது பொருள்; மலையினும் கடலினும் உண்டான இரத்தினக்குழை இவை. (கஉசு)

371. பள்ளிவெற்பின் மாறுகோள் பெறுதுவிஞ்சை மன்னர்பாழ்
வெள்ளிவெற் பெடுத்திடுங் குதம்பைகாதின் மின்னவே.

பள்ளி - கோயில்; "பள்ளி மாட்டும் பற்பல பிறுண்டும்" என்பது உதயணன்கதை. பள்ளிவெற்பு - ஸ்ரீ கைலாசம். பாழ்வெள்ளிவெற்பென்பது நாயகமில்லாத வெள்ளிமலை, தன்னரசுநாடாதலால். ‡ தென்சேடி வடசேடியென்னும் வெள்ளிமலை இரண்டும் இரண்டுகாதிற்குதம்பை. (கஉஎ)

372. குஞ்சிவேர் பறித்தகுண்டர் செம்பொனிற் குயின்றபேர்
இஞ்சிவே ரகழ்ந்துகாதி லிட்டதோ டெறிப்பவே.

குஞ்சி - ஆண்மக்கள் தலைமயிர். வேர்பறித்தலாவது மயிரைப்பறித்தல் அல்ல; அலங்காரத்தைப் பறித்தல். எனவே குஞ்சிமுதலான அலங்காரம் களைந்தாரென்க; § "குஞ்சி யழகு," ¶ "மயிர்வனப்பு" என்பன

* "புகர்வெள்ளை நாகர்தங்கோட்டம்." சிலப். க : கo.

† சிங்கவேறும் மீனேறும் குண்டலங்களாக அணியப்படுதல், இந்நூல், கoசு - ஆம் தாழிசையாலும் அறியப்படும்.

‡ தென்சேடி வடசேடி முதலியவை இந்நூல், கக - ஆம் தாழிசையாலும் அதனுரையாலும் விளங்கும்.

§ நாலடியார், கஙக. ¶ சிறுபஞ்சமூலம், ஙஎ.

வும் பிறவும் கண்டுகொள்க. செம்பொனிற்குயின்றபேரிஞ்சி - *பொன்னெயில்வட்டம்; இஃது அருகதேவருடையது; ஐந்துநூறுயோசனை வட்டமும் நீளமும் உடையது; இதுபோலும் பூதகணநாதர்க்கு ஒருகாதில் ஓலை. வேரகழ்ந்து - அடியை அகழ்ந்து. (கஉஅ)

373. பாரிடக் குலங்கள்பேய் நெடுங்கைகால்க ளிற்படக்
காருடற் சமண்குழா மநேகநேகோடி கட்டியே.

பாரிடக்குலங்கள் - பூதகணங்கள்.

இவற்றோடு பேய்கள் தங்களுடைய நெடுங்கைகளிலும் நெடுங்கால்களிலும் அமணருடைய கூட்டங்களைக் கட்டிக்கொண்டன.

காருடலென்றது †குளியாதாரென்றவாறு. பேய்நெடுங்கை நெடுங்காலெனவே பூதகணங்களுடைய குறுங்கை குறுங்கால்களையுங்கொள்க. இவ்வமணர் பொன்னெயில்வட்டத்திருக்கும் அட்டநேமிநாதர் முதலாயினோர். (கஉகூ)

374. படர்ந்தபார மேகவர்ந்து தின்றுபாழ் படுத்தின
கிடந்தகுண்டர் மெய்ந்நரம்பு மென்புமே கிடப்பவே.

படர்ந்த பாரமாவது வட்டமே போகப்படர்ந்த அமணர்களினுடம்பு. அவையிற்றை அமுதுசெய்தன, அவர்களுடைய எலும்பும் நரம்புங்கிடக்க வென்றவாறு. (கூ௦)

375. ஏறுநாலு திக்கிலும் புதுப்புலால் கமழ்ந்தெழுந்
தாறுநா லமண்பிணங் கிடந்தெயிற் றலைப்பவே.

புதுப்புலாலென்றது மரித்தபின்னிற்புதுப்புலாலை; எனவேமுன்னேயும் புலால்நாறுவரென்றவாறு. ஆறுநாலமண்பிணமாவன இருபத்துநாலு தீர்த்தங்கருமெனவுணர்க; அவர்கள்: விருஷபர், அஜிதர், சம்பவர், அபிநந்தனர், சுமதி, பத்மப்பிரபர், சுபார்சுவநாதர், சந்திரப்பிரபர், புஷ்பதந்தர், சித்திபட்டாரகர், சிரேயாம்ஸர், வாஸுபூஜ்யதேவர், விமலர், அநந்தஜித் பட்டாரகர், தர்மர், சாந்திநாதர், குந்துபட்டாரகர், அரதேவர், மல்லிஸேனதேவர், சதாநந்ததேவர், நமிபட்டாரகர், அட்டநேமி, பார்சுவநாதர், ஸ்ரீ வர்த்தமானரென்பார். (கூக)

376. தாழியிற் பிணங்களுந் தலைப்படா வெறுந்தவப்
பாழியிற் பிணங்களுந் துளப்பெழப் படுத்தியே.

---

* இது சமவசரணமென்று ஜைனஸம்பிரதாயத்தில் வழங்கும்.

† "மண்ணுவுடம்பு" என்றார் முன்னும்; உகக; "அலையாரும் புனறுறந்தவமணர்", "மாசுகொண்மேனியமணர்" என்பன தேவாரங்கள்.

தாழி - முதுமக்கட்சாடி; வைகுண்டத்துக்கும் பெயர். தாழியிற் பிணமென்றது, ஆருகதரிலே * ஆசீவகர் பெருமிடாக்களிற்புக்குத் தவம் செய்வாராதலின் அவரைச்சுட்டிநின்றது. பாழி - † அமண் பாழி. வெறுந் தவமென்றது முதலில்லாத்தவமென்றவாறு. துளப்பு - வயிறு. (௩௭௬)

377\. பாலெழுங்கொல் பண்டுபோல வன்றியே பசும்புணீர்
மேலெழுங்கொ லென்றுதேரர் தேவடங்க வெட்டியே.

பாலெழுங்கொல்பண்டு போலவென்றது: "வன்பசிக்கடும்புலிக் குடம் பளித் துடம்பின்மேல் வாளெறிந்த வாயினூடு பால்சுரந்து" என்றது கவி ராசராசன் வாக்கு; "துன்னார்க்கு மீர்ம்பால் சுரந்தான்"; இது குண்டல கேசி. இதனைப்பற்றி ஆட்சேபம். தேரர் - புத்தர். தேவென்பது தேவர் கள்; "ஒன்றுந் தேவு முலகு முயிரும்" (௪. ௧௦. ௧) என்பது திருவாய் மொழி. ‡ புத்ததேவர்க்குக் கணக்கில்லை; அநந்த புத்தரென்பது அவர்கள் ஆகமம். (௩௭௭)

378\. தடந்தொறும் படிந்துதைத்ரி தண்டமேக தண்டமாய்
மடந்தொறுங் கிடந்தசோரர் கொத்தடங்க வாரியே.

தடம் - பொய்கை. இதன்கருத்து சந்நியசித்தோமென்று சொல் லியே குளித்துத்திரிகை. ஏகம் - ஒன்று. திரி - மூன்று. சோரர் - கள் ளர்; என்றது, சாங்கியத்திலும் வேதத்திலும் சைவத்திலும் பௌத்தத் திலும் லோகாயதத்திலும் வாங்கினபொருளையுடையரல்லது தமக்கென ஒருசமயமும் பொருளும் இலராயிருத்தலின். (௩௭௮)

379\. வேலைவா யரக்கர்தம்மை மேருவில்லி மஞ்சனச்
சாலைவாய் வெதுப்பிவா ளெயிற்றினிற் சவட்டியே.

வேலைவாயரக்கர் - சமுத்திர ராட்சதர்.

எ - து: அரக்கர்களை, நன்னீரால் உப்புப்பொருளைக்கழுவினது போல மகாதேவர்திருமஞ்சனமான வடவாமுகாக்கினியிலே வெதுப்பித் தங்களுடையவாய்களில் எயிற்றிலிட்டு மென்று குதட்டி. எ - று.

---

* "தாழி கவிப்பத் தவஞ்செய்வார் மண்ஞக, வாழிய நோற்றனை மால் வரையே" (தொல். புறத்திணை. சூ. ௩௦. ந. மேற்.) என்பதும் இச்செய லைப்புலப்படுத்துகின்றது.

† அமண்பாழி - சமணர்கள் தங்குமிடம், அவர்கள் தவஞ் செய்யுங் குகை; "அமணர் சேரும், பாழியு மருகன் மேவும் பள்ளியும்" (பெரிய. திரு ஞான. அ௭௧); "எங்குமமணர் பாழிகளாய்" ஷை தண்டியடிகள். ௪

‡ 'புத்ததேவர்க்குக்கணக்கில்லை' என்பதை, "இறந்த காலத் தெண் ணில் புத்தர்கள்" (மணி. ௩௦: ௧௪) என்பதனாலும் அதன் குறிப்புரையா லும் அறியலாகும்.

இதிலே அநேககாலம் நீரிலேகிடந்தவர்களைச் சிறிது வெதுப்பிக் கொண்டதெனினுமாம் பறகூசாமைக்கு. (கரு௫)

380. காவிவண்ண னூர்தியுந்த்ரி வேதபோத காரணன்
தூவியன்ன மூங்கலந்து சுட்டுவாயி லிட்டுமே.

காவி - நீலோற்பலம் ; "காவிநோய் செய்த கருங்கயற்கண் மாதரான்" என்பது சிந்தாமணி. விஷ்ணுக்களின் ஊர்தி கருடன்; கருடலோகத்துள்ளனவெல்லாம் பிடித்துக்கொண்டார். திரிவேதபோதகாரணனுவான் பிரமா ; திரிவேதமென்றது : மூன்றே வேதம் ; நாலாவது மந்திர சாகையான அதர்வவேதம் ; "திரைவேதா" என்பது ஹலாயுதம். பிரமாவினுடைய வாகனம் அன்னம் ; பிரமலோகத்துள்ளனவும் எங்குமுள்ளனவும் கொள்க. கலந்து சுடுதலாவது சூட்டுக்கோலிற் கலந்து சுடுதல்; சுட்டநெருப்பு ஈசுவரனுடைய திருமஞ்சனமெனவுணர்க. (கரு௬)

381. * சங்கெடுத் துடைத்தயின்று தன்றுணைத் தனிப்பெருங்
கொங்குடைச் சரோருகக் கிழங்ககழ்ந்து கொண்டுமே.

எ - து : சங்குச்சாதிகளை எடுத்துத் தகர்த்து உடைத்து அவற்றின் அகத்து இறைச்சிகளைத் தின்று அவையிற்றினுடன் எண்ணப்பட்ட பத்மங்களின் கிழங்கை அகழ்ந்து தின்று. எ - று.

கொங்கு - கந்தம். சரோருகம் - தாமரை.

சங்கின் இறைச்சியும் தாமரைக்கிழங்குமெனவுணர்க. இவை வைசிரவணன் உலகத்துள்ளன. (கரு௭)

382. † கைவழிக் குலப்பொருப்பொ ரெட்டுடன் கலந்துகொண்
டவ்வழிப் புயங்கமெட்டு மம்புயத் திருத்தியே.

கைவழிப்பொருப்பு ஓரெட்டாவன மகாமேருவின் சிகரங்களாக அதன் எட்டுத்திக்கிலுமுள்ள எட்டுமலைகள்.

அம்மலைகளெட்டையும் பாம்பையும் கலந்துபிணைத்துத் தங்கள்தோள்களில் ஆபரணமாக இட்டுக்கொண்டாரென்பது.

புயங்கம் - பாம்பு. அம் புயம் - அழகிய புயம். (கரு௮)

383. நீர்கலக்கி மீனவே றெடுத்தயின்று நீளிறக்
கார்கலக்கி வானவேறு செவ்வியோடு கவ்வியே.

நீரென்றது சலாங்கிசமெல்லாமெனவுணர்க. வானவேறு செவ்வியோடு கவ்வுகையாவது நெருப்பு அவியாமற் கவ்வுகை. நெருப்பு அவியின்

---

* இதிற் கூறப்படுவன சங்கநிதியும் பதுமநிதியும்.

† மலைகளைப் பாம்புடன் பிணைத்து ஆபரணமாக இட்டுக்கொண்டமை இந்நூல், ௪௧௧ - ஆம் தாழிசையிலும் வந்துள்ளது.

உருமேறென்னும் பெயர்கெடும் ; சுருவும் செவ்விகெடிற்புன்மீனும்; உருமேறும் செவ்விகெடின் வெறுமேரும். (கஙக)

384. ஆழிமால் வரைப்புறத் திறைத்துவாரி யற்றபின்
பாழிமால் கடற்பெருந் திமிங்கிலங்கள் பற்றியே.

ஆழிமால்வரை - சக்கரவாளவெற்பு. அதற்கு அப்பாலுள்ள சமுத்திரசலங்களை இறைத்து அற்றபின்னென்றது மீனற்றபின்னேயென வுணர்க. பாழிமால்கடல் - பெருங்கடல். திமிங்கிலங்கள் - மச்சியராச குலங்கள் ; இவையிற்றை * யானையைவிழுங்கும் மீனென்பர். யானையை விழுங்கும்மீன்கள் இக்கடலிலும் உள ; அவை பனைமீனென்றும் யானை மீனென்றும் மோங்கிலென்றும் அனுவிஷமென்றும் பெயருடையன ; அவை இவற்றிற்கு எளியனவெனவுணர்க. (கசo)

385. அடவிமுற்று மசலமுற்று மவனிமுற்று மதிர்படத்
தடவிமுற்று முயிர்தொலைச்சி வயிறுவேட்கை தணியவே.

தொலைச்சி-விட்டு; உயிர்நித்தியமாதலால் தொலைச்சியென்றார். (கசக)

386. பிடிப்பிடித் துணித்துணிப் பிணிக்கெனப் பெயற்புலத்
திடிப்பிடித் தெருத்திறத் தெயிற்றரைத் திறக்கியே.

எ - து: பிடிப்பிடி முறிமுறி பிணிக்கவெனச்சொல்லும் ஓசை வருஷாகாலத்து இடிஇடித்தாற்போன்று ஆரவாரித்துத் தாங்கள்பிடித்தபிராணிகளுடைய இறைச்சிமுதலாயினவெல்லாம் தங்கள் எயிற்றினாலே அரைத்து வயிற்றிலே இழித்து. எ - று.

எருத்திறமென்றது இறைச்சித்திறமெல்லாவற்றையும் ; எனவே உயிர்த்திறம் இங்கும்விட்டார்; "எருத்துவ்விய புலிபோன்றன" (சு: க - பி -ம்); இது புறநானூறு. (கசஉ)

387. வாலெடுத்து நாகர்தங்கள் திவ்யபானம் வைத்தபொற்
சாலெடுத்து வாய்மடுத்து வெவ்விடாய் தணித்துமே.

வாலெடுத்தென்றதற்குப் பாம்பின் வால்களையெடுத்தமாத்திரத்திலே அமுதகலசம் எடுக்கலாயினவென்பது பொருள். (கசஙு)

388. கொண்டல்கோ ளறுத்துவான யாறுகோ ளறுத்துமேல்
அண்டகோள கைப்புறத் தருதநீ ரறுத்துமே.

கோள் - கோட்பாடு. கொண்டல்கோளென்றது † மெய்பிறிதாகிடத்தியற்கையானது. வானயாற்றுக்கோளென வேண்டுவதனை வான

---

* "யானையை விழுங்குமீன் றிமிங்கில மாகும்." பிங்கலந்தை.

† தோல். தொகை. சூ. கடு.

யாறுகோளென்றது மிகற்கைமருங்கினியற்கை தோன்றுதல். அண்டகோளகைப்புறத் தருத நீரென்றது மகாதேவர் திருச்சடாபாரம் போல இந்நீர் அருததென்றவாறு. இஃது அருமைபோலும். (கசச)

வேறு.

389. மண்ணிற்செந்தீ யடுப்பவடுப்பல மாய்ந்தன
கண்ணிற்காய்ச்சிக் குடித்தனநாற்பாற் கடலுமே.

பூமியிலுள்ள நெருப்பெல்லாம் நட்சத்திரங்களோடே அற்றன. நாற்பாற்கடல் காய்த்தத் தங்கள் கண்களான நெருப்பைக்கொண்டாரென வுணர்க. மாய்ந்தனவென்னுஞ் சொல்லை நட்சத்திரத்திலும் நெருப்பிலும் ஒக்கக்கொள்க. (கசரு)

390. உயிர்ப்பெரும்பசி தீர்ந்தகொலில்லைகொ லுண்டுவெண்
தயிர்ப்பெருங்கடன் மாய்த்தனபூதவே தாளமே.

இவையெல்லாம் உண்டும் பசிதீர்ந்தனவில்லையென்பது கருத்து. தயிர்க்கடல்மாய்க்கையாவது விடாய்மாத்திரம் ஆற்றுகை. (கசசு)

391. அப்புளித்தயிர்க் கடலினுப்புக்கட லடையவே
கொப்புளித்தவை யிரண்டுமொன்றாக்கிக் குடித்தவே.

இக்கதை சொல்லச்செய்தே ஒருபசாசு தயிர்க்கடல் காலப்பழமையாற்புளித்ததன்றோ? குடிக்கஅரிதல்லவோ? குடித்தவாறெப்படி யென்ன, இப்பசாசு சொன்னபடி இது.

அப்புளித்தயிர்க்கடலென்றது முன்னஞ்சொல்லப்பட்ட புளித்தயிர்க்கடலை. அதில் உப்புக்கடலைக்கலந்து புளிநீக்கிக்குடித்தனவென்பது. (கசஎ)

392. பொய்க்கடற்புறத் தெய்வங்களைப்பொரித் துத்தின
நெய்க்கடற்பசை யற்றதெங்குண் டினிநெய்யே.

பொய்க்கடற்புறத்தெய்வங்களாவன பரசமயதெய்வங்கள். பொரிக்கப்போந்த அத்தனையே நெய்க்கடல். (கசஅ)

393. வடியவாங்கி மடுக்கவெங்கேபுள வந்துதாம்
படியவன்றள றாயின தண்ணீர்ப் பரவையே.

வடியவாங்கி மடுத்தலாவது கைம்மண்டை எற்றுக்குடித்தல். அஃதல்லது கடல்கொள்ளும் கலம் பிறிதில்லை. வந்து தாம்படிய - ஒத்துவந்து உடம்புகழுவ. (கசகூ)

394. கருப்புச்சாற்றுக் கடலன்றுபிழைத்ததோ கழுது
விருப்புச்சாற்றிற் குடித்தனகிடந்தன வெடித்தே.

இவையிற்றில் உண்டான நல்லகற்பரிகளையும் கடலேழினுமுள்ள சங்கினங்களையும் எடுத்துக்கொண்டு வாய்வைத்தூதின; அவ்வளவில் எல்லாலோகங்களும் பொடியாயின. இதற்குமுன்னே அவையிற்றிற் சலாங்கிசமான நீர்க்கூறெல்லாம் வற்றக்குடித்துப் பின்பு அங்குக்கிடந்த சங்கினங்களை எடுத்தனவெனக்கொள்க.

இதிலே நல்லனவென்னுஞ்சொல் சங்குகளைக்காட்டுமென் பாரும் உளர்; அதன்பயன் அவை தாமேயூதுக்குவன. (௩௯௭)

398. சக்க ரக்கிரியு மெக்கிரியு மெப்படவியுஞ்
சமைய வந்துதச ரத்தமுனி ஞாந்தமுடின்
றக்க ரந்துலகு டைக்கிறு முடைக்கு மிதிலா
ரலகை யேயென விரிந்சனைட் வந்தலறவே.

சக்கரக்கிரி - சக்கரவாளபருவதம். எக்கிரியும் - இவையல்லாத எல்லாப்பருவதங்களும். படவி - பூமி.

இவையெல்லாம் உடைந்துபோக ஒருகையாலே தழுவினும் தழுவவல்லதாய்த் தழுவினகைதன்னுடே உலகமெல்லாவற்றையும் தாக்கவல்லதாயிருந்தது இப்பேய்ப்படையில் ஒருபேயென்று பிரமா தூக்கப்பட்டுக் கதறப் படையெழுந்தது.

'இது' என்றது ஒருகையைப்பற்றி. தழுவகை வகையின்றெனம். உடைக்கை தழுவின கையின்றொழில்.

இதிற்போந்த பயன்: தன்னாற் படைக்கப்பட்டனவற்றையும் உலகமும் ஒருபேயின் ஒருகைக்குப் போதவில்லையென்பது பிரமாவின்கருத்து. பிரமாவின்படைப்பல்ல பசாசலோகமும் பிரமலோகமும்; அவை இரும்பும் பொன்னுமெனவுணர்க; சத்தியம் இப்பெற்றிடதே.

இத்தாழிசையில் 'எக்கிரியுமெப்படவியும்' என்றது சொல்லதிசயமாய உபதேசத்தாலல்லது உணரலரிது. (௩௯௮)

399. ஒரெ யிற்றினும் வயிற்றினொரு பாதுமிடவே
புள்ள தெவ்வுலகு மல்லதொரு பூதமொருபேய்
ஈரெ யிற்றினும் வயிற்றினொரு பாதுமிடவே
றில்லை யேயென வெறித்தயன் மறித்திரியவே.

ஒருபூதம் ஒருபேயென்றது ஒருபூதத்தினது ஒருபேயினதென்க; ஒருபூதத்துக்கு ஒருபேய்க்கென்றுமாம். வெறித்து - பயப்பட்டு. மறித்திரிதல் - மீண்டுபோகை. (௩௯௯)

சரூபமென்றவாறு. வெற்பின்நடுவே: எழ்வெற்பின் நடுவென மொழி மாறிக்கூட்டுக. மண்ணில்வந்த மணியென்பது பூமியணுவினால்வந்த மணியென்றவாறு. பொடியென்பது மணலால்வந்ததுளி. வீரனவனோர் வடிவில்வந்ததென்றது வீரபத்திரதேவருடைய திருமேனியில் ஒருறுப்பிற் பிறந்ததென்றவாறு.

எனவே, பேயும் பூதமும் இவையெல்லாமாயின. இதன்கருத்து: வீரபத்திரதேவர் முப்பத்திரண்டுறுப்பினும் ஒருறுப்பிற்பிறந்தன இவையெல்லாம்; இவைகளில் ஒருபூதமும் ஒருபேயுமே தனித்தனி எல்லாமாகவல்லன; அழிக்கனவென அஞ்சவேண்டாமென்பது பொருள். (க௬க)

406. பூத முற்பழைய வாமனன் வளர்ந்ததனையும்
புடைபெ யர்ந்தெழ வளர்ந்துபெயர் போனகழுதின்
சாத முங்கழு தெனும்பெயர் தவிர்ந்தன நிணத்
தசைமி சைந்துடல் விசும்புபுதை யத்தனியவே.

பூதங்களும் பராணவாமனருபன் வளர்ந்த அளவும் வளர்ந்து குறளென்னும் பெயர்தவிர்ந்தன. வாமனனைப்போலக் குறளாகி நெடியவானமை உவமை. இது சம்பிரமம். புடைபெயர்ந்தெழ வளர்ந்தென்றது * அட்டம்வளராது நெட்ட நெடுமைகொண்டனவென்றவாறு. இனிப் பசாசுகளும் நெய்யுடைய மாங்கிசத்தைத்தின்று தடித்து ஆகாசமெல்லாம் தாமாயின; நெடுமைவளர்ந்து அட்டமும் வளர்ந்தன.

இதன்கருத்து பூதம் பேயாயினவென்பது. (க௬௨)

407. கார டங்கியன தாரகை யடங்கியனகோள்
கதிய டங்கியன மூவர்கிளர் தேவர்ககனத்
தூர டங்கியன பின்னுமெழு கின்றவனகத்
துள்ள டங்கியன வுள்ளபதி னாலுலகுமே.

கோள் கதியடங்கியன - நவக்கிரகங்கள் செலவொழிந்தன; கதி - செலவு. மூவர்கிளர் தேவர் ககனத்தூரடங்கியன - பிரமலோகமும் விஷ்ணுலோகமும் புரந்தரலோகமுமாகிய ஆகாசத்து ஊர்களான பிரமபுரமும் வைகுண்டமும் அமராபுரமும் அடங்கியன. இப்படிப்பட்டுப் பின்னையும் எழுகின்ற வீரபத்திரதேவர் சரீரத்தினுள்ளே அடங்கியன சதுர்த்தசபுவனமும்.

எனவே பல உலகங்களின் அப்புறத்தும் சென்றனவென உணர்க. (க௬௩)

* அட்டம் - குறுக்கு; "அட்ட மாளித் திரள்வந் தணையு மண்ணுமலையாரே" (தேவாரம்); "அட்டமே செல்வார்" (திருவிளை. மண்சுமந்த. ௨0); இது கொங்குநாட்டு வழக்கு.

413. இடிபடு புகத்துவீழ்ந்து டிபி
லெழுப்பிலக்கரு மிறக்கவே
விடும்விடுக்கர தலத்தொதபூக்துகி
சக்ரகிரிகிழிய வீழவே.

பதயுகம் - காலிரண்டு. அவைபெயர்தோறும் ஏழ்பாதாளங்களும் கீழ்வீழும்; கைவீசுந்தோறும் மலைகளெழுந்து போய்ச் சக்கரவாளகிரி யைப்பிளந்து அப்புறத்துப்போய்வீழும்.

விடுகை - வீசுகை. (௧௬௯)

414. விட்டகுலகிரிக ளெட்டுமெட்டுத்திசை
யானையெட்டும்விழ வீழவே
கட்டவிழியிலெழு கடலுமவற்றிடை
தீவுமொக்கவிலை சுவறவே.

விட்டகுலகிரிகளென்றது உலோகத்தைவிட்டகுலகிரிகளென்றவாறு; உலோகத்தைவிடுதலாவது மிகவும் உயர்தல். விழவீழ்தல் - பொன்றக் கெடுதல். கட்டவிழியென்றது நிலையிற்றைச்சுட்ட கண்ணென்றவாறு. அவ்விழியாலே கடலும் தீவுகளும் பொடிபட்டன. (௧௭௰)

415. சக்குநேமியொ டுறக்குமேகமு
மிறக்குமேகமுந் தப்பவே
பொக்குநேமியுடன் வெவ்வெந்துபொரு
பொரிபுமேசகல கிரியுமே.

உறக்குமேகமென்றது விஷ்ணுபகவானை; மேகம்போல்வானை மேக மென்றது. சக்கும் நேமியுமென்றது அவன்படைகளை. இறக்குமேக மென்றது மேகத்தையல்ல; இறக்கும் ஏகமுமென்க; ஏகம் - ஒன்று; ஒன்றுமென்றவாறு; ஆகாசத்தினின்றும் இழிவனவற்றுள் ஒன்றும் தப்பாதென்றவாறு. பொக்குநேமி - சக்கரவாளம். பொரிபொரியென் றது அநுகாரணவோசை; இரட்டைச்சொல்லு. சகலகிரியும் - எல்லாமலை களும். (௧௭௧)

416. விழும்விழுந்தொறு தலத்திலப்பகிர்க்
துரகர்விடர்கடிவு வீழவே
எழுமெழும்பண மணிகளவ்வழி
யிரவிகள்வருவ தென்னவே.

எ - று: எடுத்தெறியக் கீழ்வீழ்ந்த பாதாளத்தின்முழைகளின் நடுவேவீழ அவைவிழுந்த நாகராசாக்கள் படத்தின்மாணிக்கங்கள் எழுந் தோறும் அப்பாதாளத்தினின்றும் எழுகின்ற ஆதித்தர்களைப்போன் றன. எ - று. (௧௭௨)

லாகா அவ்வெழுத்திடுதற்குக்காரணம் சந்தியிசைவஞ்சியென்பாரும், சருவஞ்ஞகவியென்பாரும் இகரமுமுண்டு செய்யுளாதலின் தொக்கதென் பாரும் அத்தொகை மனத்ததென்பாரும் பிறகூறுவாருமுளர்; நல்ல துணர்க. படிபொருமல் வருகையாவது பூமிதான் பாரம்பொருதென்று ஆகாசமே வருவாரென்பது. பதாகினி - கொடிப்படை (கஅகூ)

## தேவர்கள் இந்திரனுக்குத் தெரிவித்தல்.

### வேறு.

434. இப்படையோடுமையன் மகராலயத்தில்
ரவிபோலெழுந் தருளுமென்
றப்படையோடுநின்ற சுரர்சென்றுதங்க
ளரசற்கிசைத்த பொழுதே.

சுரர் - தேவர்கள். அரசன் - இந்திரன். (கக0)

## இந்திரன் கூற்று.

435. ஆவபுகுந்தப்ரத்த மறியாதடுப்ப
தறியாததேவ ரெதிர்தன்
பாவமனங்கவற்ற வறிவின்மைகொண்டு
சிலவச்ரபாணி பகர்வான்.

ஆவ - அந்தோ. பிரத்தம் - பிரமாதம்; அது தேவிகோபம். அடுப் பதறியாமை - பவிஷ்யம் போகாமை. பாவம் மனங்கவற்ற - தேவேந்தி ரன் பூருவசன்மத்திற் செய்தபாவம் படக்கடவகாலம் அவன் மனத்தைப் பற்றிக்கவற்ற. அறிவின்மையென்றது ஸ்ரீயின்மிகுதி. வச்சிரபாணி - தேவேந்திரன்; இஃது அன்மொழித்தொகை. (கககு)

436. பேதைமணந்தகௌரி யழையாமலிங்கு
வருவாளிகழ்ந்து பெரிதுந்
தாதைமுகங்கொடாது விடுவானமக்கு
மூலகுக்குமென்கொ றவமே.

இதன் பொருளறிக. (ககஉ)

437. முகடுதகர்ந்துசிந்த முரிசக்ரவாள
கிரியேபிடித்து முதலெண்
பகடுமெழுந்துபெய்யு மகராலயங்க
ளாவைசெய்வதியாவர் பணியே.

முகடென்றது உலகமுடிமுகட்டை; மோட்சத்தலமென்றுமாம். எழுந்தென்பதற்குமுன்பும் சிந்தவென்பதைக் கூட்டிக்கொள்க. எனவே பகடுமெழுந்து சிந்தப்பெய்யு மகராலயங்களெனவுணர்க; மகராலயம்-கடல்.

அவையும் என்பணியன்றோ செய்வனவென்றவாறு. (கக௩)

438. தரையையகழ்ந்துதின்று கடலேழுநக்கி
வடமேருவாதி தடமால்
வரையையவளைந்துதின்னும் வடவானலத்தின்
வலியேநமக்கு வலியே.

தரை - பூமி. பூமியைத்தின்றால் அக்கடல் தண்ணீராகக்குடிக்கப் போதாதென்றபடி. நமக்குமாத்திரம் போலும் இத்தனைவலியென்ற வாறு. வலியேயென்றதில் ஏகாரம் வினாவல்ல; தேற்றேகாரம்.

இதன்கருத்து, வடவாமுகாக்கினி இதுகேட்டுத் தானேவருதல்.

இஃது ஈசுவரனை அஞ்சின நினைப்பு. (கக௪)

439. அடியடையப்பறித்த குலபூதரங்க
ளழியாகவூழி யறையும்
படியடையப்பிதிர்க்கு மொருவாதராச
னவனிற்கயாது பகையே.

பறித்தவென்றது பறிக்கப்பட்டவென்னும் சொல்விழுக்காடென வுணர்க. பூதரம் - மலை. குலபூதரங்கள் - குலபருவதங்கள். அழி - வைக்கோல்; "ஆளழி வாங்கி யதரி திரித்த" (உ௬ : உ௩௩); இது சிலப்பதிகாரம்; "உழுது நோன்பக ன் றங்கு" (௬உ௫ : எ); புறநானூறு. படியடையப் பிதிர்க்குமென்றது பிருதுவிமுழுவதும் பொடியாக்கு மென்றவாறு. மலையைஅறையும் பூமியைப்பிதிர்க்கும் வாதராசனென்க. அவனென்றது சுட்டுப்பெயர். (கக௫)

440. மாயிரநேமியாதி மலைசுட்டுவேலை
நிலைசுட்டயின்று மடியா
ஆயிரமானவெய்ய கதிராறிரண்டு
மெவனேவல்செய்வ தவரே.

மாயிரமென்பது புறமானமுகம்; எனவே உலகப்புறச்சக்கரவாளமென வுணர்க. வேலைநிலையென்பது வற்றாக்கடல். ஆயிரமாவது இங்கே பன்னீராயிரம். காரியத்தால் ஆதித்தரெனவறிக. அயின்றுமென்றதில் உம்மைக்கு வடியச்செய்தபின்பும் என்பணிசெய்வாராவரென்பது பொருள். (கக௬)

441. உம்பருமேனையோரு மலைமத்திலிட்ட
வுரகம்பிடிக்கு மமுதத்
தம்பமமைந்துடம்பு சலியாதுநின்ற
தனிமன்னன்யாவர் தமரே.

ஏனையோர் - அசுரர். உரகம்பிடித்தலாவது சந்திரனென்னும் அமுதத்தம்பத்து அராப் பிடிக்கலாயதென்பது நினைவு; பிணித்தென்னும் பாடமுமுண்டு. அமைந்தென்றது தானுகச்சமைந்தென்றவாறு. தனி மன்னனென்றது ராசாவென்னும் பெயரைத் தனித்துடையனென்றவாறு. இது வேதசத்தம்; இராசா வென்னும் பெயர் *நிகண்டுவிலுமுண்டு. (கசஎ)

442. பருதிபடப்பரந்து புகைகண்கடப்ப
வுலகங்கண்மூடி பகுவாய்
நிருதிசெருக்குறிக்கி னுளரேதெரிக்கி
னினியென்படைக்கு நிகரே.

எ - து : ஆதித்தியன் பட்டுப்போம்படி புகைபுறப்பட்டு உலகவிடமெங்கும் கடந்துசெல்ல அங்காந்தவாயினுடன் தென்மேலை மூலைக்குக் கர்த்தாவான நிருதியே பூசல்பொரநினைந்தானாயின் ஆராயுமிடத்து ஆருளர், என்படைக்கு மாறுபட்டுநிற்பார்? எ - று.

கண்ணும் வாயும் புகையுமென்பாருமுளர். செருக்குறிக்கினென்றது குணமிக உடையன், கோபமிலனென்றவாறு. (கசஅ)

443. மதுநுரைவார்கடுக்கை யொருகண்ணிசூடி
மழுவாள்வலத்து வரதம்
பதிஞெருதேவரோறு பதிஞென்றுமேறி
னுலகங்கள்யாவர் பரமே.

மதுநுரை - தேன்மிகுதியின் பொங்கல். கடுக்கை - கொன்றைப்பூ. நம் பதிஞெரு தேவரென்றது ஆலகாலம் உண்ணுதே நம்முடனே அமுதம் உண்டவர்களென்றவாறு. எனவே மகாதேவர் நம்முடனுண்ணலாம் பேறில ரென்றபடி. பதிஞெரு தேவராவார்: ஶ்ரஹஶரநு, ஶவடிநு, ஜாகி, கமெஜகவாநு, கஹிர்வோஷ, விநாகி, ஶவநாெஶ்யநு, கவாஷி, ஷாணா, ஶவநு, ஶிஉநு என்பார். (கசக)

*நிகண் டென்றது வடமொழி நிகண்டை; இராசவென்பதன் பரியாயப்பெயர் தமிழ் நிகண்டுகளிலுமுண்டு; "விதுநில வல்லோன் வேந்தன் றண்ணவன்" (பிங்கலந்தை. உஉ௫), "விதுவொடு குமுத நண்பன் சுதாகரன் வேந்த னேலோன்." சூடாமணி. க : ௫க.

444. சொற்பலசொல்லியென்கொ லுயிர்வீசுபாசம்
விடுகாலன்யாவர் துணையே
பற்பலகோடியண்ட மொருதண்டிலெற்றும்
யமராசன்யாவர் படையே.

* காலனாவான் யமதூதர்க்கு நாயகஞ்செய்வான். பற்பலவென்றது வல்லெழுத்துறழ்ச்சி. பற்பலகோடியண்டம் ஒரு தண்டிலெற்றுகை ஓரடியிலகப்படுத்துகை; ஓரடியிலகப்படுத்துகையாவது வலையுள் அகப்பட்ட மச்சியசாதிபோல யமதண்டின் கீழ் உலகம் அகப்படச்செய்கையெனவுணர்க.

தாரகாமயம், †தேவாசுரம், ராமாயணம், மகாபாரதம்போலப் பல நாட் கூடி இறப்பதல்லது உலகம்பேர்ந்துபோமன்று யமராசன்வேணுமென வுணர்க. (௨௦௦)

445. கருடரியக்கர்சித்தர் கடிபூதநாதர்
நிசிசரர்தானவர்கள்கிம்
புருடர்முதற்குலத்த பதினெண்பதாதி
புடையேபரந்த படையே.

கடி - பேய். நிசிசரர் - ராட்சதர். தானவர் - அசுரர். கிம்புருடர்- கந்தருவராசர்; இதனைக் காதம்பரியிற் கண்டுகொள்க. பதாதிகள் நம்படையென்க. (௨௦௧)

446. முனிவருமாழியானு மிமையோரும்பானு
மிளையோனுநிற்க ரவிமுன்
பனிவருமென்னவிங்கு வருகின்றதென்கொ
லொருசூலபாணி படையே.

முனிவர் - ரிஷிகள். ஆழியான் - விஷ்ணு. சூலபாணி - மகாதேவர்.

இப்பாட்டின் கருத்து: மகாதேவர் தாம்வாராதே வீரபத்திரதேவரை ஏவுவதென்னென்பது. (௨௦௨)

---

* காலன் கூற்றுவனென்றும் கூறப்படுவான்; இவனை யமராசனுடைய ஏவலாளனென்பர்; "தருமனு மடங்கலும்" (பரி. ௩: ௮) என்பதன் உரையைப்பார்க்க; "தருமராசற்கா வந்த, கூற்றினைக் குமைப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே." தேவாரம்.

† "தேவாசுரம் ராமாயண மாபாரத முளவென், றோவாவுரை யோயும்படி யுளதப்பொருகளமே" (கலிங்கத். ௪௫௧) எனத் தேவாசுர முதலியவை இப்படியே ஒரு சேரக் கூறப்பெற்றிருத்தல் காண்க; "உயிர்த்தொகை... எண்கொள" (சிலப். ௨௭: ௮-௧௦) என்பதன் அரும்பதவுரையையும் அடிக் குறிப்பையும் பார்க்க.

447. வறுமையெவன்கொலென்க ளொருதன்படைக்கு
வலியாவதென்கொ லிமையோர்
சிறுமையெவன்கொலென்னை மதியாதுசேனை
விடுவானெவன்கொல் சிவனே.

வறுமையெவன்கொலென்கணென்றது மகாதேவர் தமக்கென ஒருட னும் உடையரல்லரென்றவாறு. மகாதேவர் தாமும் வரப்பெற்றிலோமா காதேயென்று இன்னுமையையுடையவனுயினுன் தேவேந்திரன்.

முன்னில், "முகடு தகர்ந்து சிந்த" (சஙஎ) என்னும் பாட்டுத்தொட ங்கி, "முனிவருமாழியானும்" (சசசு) என்னும்பாட்டு இறுதியாகக் கூறப் பட்ட நீரும் நெருப்பும் காற்றும் ஆதித்தனும் சந்திரனும் நிருதியும் ருத் திரரும் காலபாசமும் யமதண்டமும் பதினெண்கணங்களும் மகாதேவர்க் கும் உள. அவை கங்கையும் நெற்றிக்கண்ணும் மூச்சிற்காற்றும் வலக் கண்ணும் இடக்கண்ணும் ஸ்ரீபாதமுயலகனும் ரிஷபமும் காலக்கடப்பும் திரிசூலமும் பதினெண்கணங்களுமெனக் கொள்க.

இனிச் சொல்லப்புகுகின்றது மகாதேவர் தாழ்வும் தன் ஏற்றமு மெனவுணர்க. (உ0ஙு)

வேறு.

448. யானுள்பதி யமராபதி யிமந்தன் றெனதேழ்
கானுள்குல கிரிதன்மலை கயிலைச்சிறு கறடே.

என்வே என்னிற்பெரியாரும் தன்னிற்சிறியாரும் இல்லையென்ற வாறு.

ஈமம் - சுடுகாடு. இப்பாட்டிற் காவென்றது இசையை; கானமென் னும் ஆரியச்சொல் சிதைந்ததென்பாரும் அம்மென்னுஞ்சாரியை அழிந்த தென்பாருமுளர்; அவைபொருளல்ல. கானெனப் பிராகிருதபாஷை யிலும் கௌடபாஷையிலும் செவிக்குப்பெயர்; எனவே கானுள் குலகிரி யென்றதற்குக் கீர்த்தியையுடைய மலையென்பதுபொருள். கறடென்றது கல்லென்பதற்கும் போதாதென்றவாறு. (உ0ச)

449. குலவெண்பணி யானேபணி கொள்வேனணி கொள்ளும்
பலவெண்பணி யவையுஞ்சிலர் விடுதந்தன பண்டே.

குலவெண்பணியென்றது அட்டமகாநாகங்களை; இது * முன்சொன் ேனும். இவை எனக்குப்பணிசெய்வனவென்றவாறு. ஈசுவரன்றன் ஆபரண மாகக்கொண்டவெண்பணி வெறும்பாம்பென்றவாறு. அவையும் தாருகா

* முன்னென்றது இந்நூல் கக - ஆம் தாழிசையுரையை.

வனத்தில் ரிஷிகளாலே அக்கினிகோத்திரத்துப் பிறப்பித்து விடப்பட்டன; எனவே அதற்கு முன்பு ஒன்றுமில்லை யென்றவாறு. (உ0ரு)

450. சுரும்பூத விழும்பேயொடு சூழ்பூத மவற்கைம்
பெரும்பூதமு மெல்லீரு மெனக்கேபடை பெரிதே.

சுரும்பூதவிழுகையென்றது பேய்களின் மென்மையைச் சொன்னவாறு. ஐம்பெரும்பூதமாவன: பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாசங்களெனவுணர்க. இவை பூதங்களினெதிர். எல்லீருமென்றது தேவர்களை. இவர் பேய்க்கெதிர். இப்பாட்டு எதிர்நிரனிறை. (உ0சு)

451. கோலந்தரு தருவின்குளிர் குழைநீழல் விடேன்யான்
ஆலந்தரு வறுநீழலி னிடைவைகுவ தவனே.

கோலம் - அழகு. விடேன்யானென்றது யான் வீற்றிருப்பதும் விளையாடுவதும் கற்பகவிருட்சத்தின் நிழலிலேதானென்றவாறு. ஆலம் - வடவிருட்சம். இதற்கு, * "பூல்வே லென்று வாலென் கிளவியொடாமுப் பெயர்க்கு மம்மிடை வருமே" என்பது விதி. வறுநீழலென்றது நிழல்கொடுப்பதல்லது மற்றொன்றும் கொடுக்கமாட்டாதென்றவாறு. வைகுவதென்றது எங்கும்போய் இரந்துண்டுவந்து வைகுமிடம் அது வென்றவாறு. (உ0எ)

452. எண்கூறவ னொருபேருரு வதனிற்கனன் முதலேழ்
திண்கூறு மெனக்கேபடை யென்கொண்டுகொல் செருவே.

அட்டாங்கமூர்த்தியென்பது மகாதேவர் பெயர். அது பெயர்மாத்திரமேதான். அவை எட்டினும் வெறும் பாபாத்துமாவாய் நிற்பதொன்று; மறறை ஏழுகூறுமாவன பஞ்சமகாபூதங்களும் சந்திராதித்தருமென்பன; இவ்வேழுகூற்றுப்படையும் என்னுடையனவென்றவாறு. செரு - யுத்தம். என்கொண்டென்றது தாம்பிடிக்கும் ஆயுதமும் தம்முடையனவல்லவென்றவாறு. எனவே லோகத்து வத்துக்களெல்லாம் பஞ்சபூத சமவாயமென்பதுணர்க. (உ0அ)

453. வானேறுரு மெனதாயுத மவனாயுத மழுவாள்
யானேறுவ தயிராபத மவனேறுவ தெருதே.

எ - து: ஆகாசத்தில் உருமேறான வச்சிராயுதம் எனது ஆயுதம். ஈசுவரனுக்கு ஆயுதம் மழு. அன்றி எனக்குவாகனம் அயிராபதமென்கிறயானை. ஈசுவரனுக்குவாகனம் வெறும் எருது. எ - று.

---

* தொல். புள்ளி. சூ. அ0.

எனவே, முன்னிற்பாட்டில் மகாபூதமஞ்சும் சந்திராதித்தரும் எனக்குப்படை; தனக்குப்படையும் இல்லை; தானும் வெறும் ஆன்மாவே யென்னநினைத்து இப்பாட்டில்அவன் மகாதேவருடைய திருக்கையில் மழுவும் ஏறும் வாகனமான எருதும் கண்டறியு மயக்கத்தால் நினைத்து மற்று மழுவான ஆயுதமும் இவையிற்றில் ஒன்றல்ல, ஓமமந்திரத்தாற் பிராமணர் விடுவித்தபகைப்படை யென்றுனென்றவாறு. மழுவை வாளென்றதன்று; ஆள்யான் - ஆளுகிறயானென்றவாறு. மழு வாளன்றென்று ஆட்சேபஞ் சொல்லுமாம். எனவே மழு ஏந்தும்மழுவெனவுணர்க; அஃது இருப்புக்கட்டிபோலும் நெருப்புக்கட்டியென்றவாறு. எருதென்றது எருதையன்று; தருமரூபமென்பது. தருமம் வெளுத்திருத்தலாலும் வஸ்துக்களில் வலிதாதலாலும் தருமத்தின்மேலல்லது ஈசுவரன் ஏறுனென்றுகொண்டான்.

இதில் தேவேந்திரன் ஈசுவரனை இகழ்ந்தவாறுவது தருமவாகனன் யுத்தஞ்செய்யவல்லனல்ல னென்றவாறு. (உ0கூ)

454. என்கண்ணினி லிவையாயிர மெதிராய்வரு மீசன்
தன்கண்ணினின் முக்கண்ணினி யார்கண்ணது தாழ்வே.

இவையாயிரமென்றது விபரீதமின்றி அழகுடையனவென்றவாறு. முக்கண்ணென்றது விபரீதமுடையனவாய் ஒன்று குளிர்ந்தும் ஒன்றுசுட்டும் ஒன்றுயோகத்தைப்பற்றி அக்கினிச்சுவாலையாய் விலங்காதே மேனோக்கியும் நிற்பன வென்றபடி.

எனவே தன்கண்களின் அழகுரைத்தவாறு. (உக0)

455. எம்மின்னுயி ரனையீர்படை யெல்லாமுடன் வரநீர்
வம்மின்னென விடைநல்கின னிதுவாசவன் வகையே.

'எம்மின்னுயிரனையீர்' என்றது முதன்மைச்சொல். இனி யாக பலமுண்ணத் தனியேவந்தீர்! நீங்கள்போய் நும்படைகளுடனே வருக வென்று விடைகொடுத்தான் தேவேந்திரன். இஃது இவன்கூற்று. மற்று இனி அப்படையுடன் அவர்கள் வந்தவாறு சொல்வான் றொடங்கினர்.

இனிப் படை யெழுச்சி. (உகக)

## தேவர்கள் படையெழுச்சி.

### வேறு.

456. சிகரக்குலக்கிரிகள் சிதரத்தகர்க்குமெறி திரையாலொரோர்
மகரக்களிக்களிறு மறுகக்கடற்கரசன் வரவாரவே.

எ - து : குவடுகளையுடைய குலபருவதங்களையுங்கூடச் சிதர்ந்து பொடியாம்படி மோதவல்ல எறிதிரையொன்றால் ஒன்றாகக்களித்த சுறாக் *களிறுகள் ஒழுக்கறாதுவாரநிற்க வருணராசன் வந்தான். எ - று.

ஒருதிரையால் ஒரோவோர் சுறாவென்றதனால் நீளமுடைமையும், பருவதங்களையுந் தகர்க்குந்திரையுடனே வருகின்ற சுறாவென்றதனால் வலியுடைமையும் பெறப்பட்டன. ஒருதிரைக்கொருசுறாவென்னும்படி வருதலைப்பிடித்து வாரவென்னுஞ் சொல்லிட்டது; வார - ஒழுக.

சுறாவாகலிற் பின்வருவன முன்வந்தன, பட்டன அறியா. (உகஉ)

457. கலகக்கனற்கொடிகள் ககனப்பரப்பிலெரி கதிரூடுபோய்
உலகக்கவிப்படைய வுருகக்கடைக்கனலு முடனேறவே.

கலகக்கனற்கொடிகளாவன தூமகேதுக்கள் ; அவை அட்டரூப தூமகேதுவென்பன ; எட்டுத்திக்கிலும் உற்பாதகாலங்களில் தோன்றக்கடவன அவை ; பின்னும் அக்கினிமூலமாய்த் தூமகேதுவாய் நரகாக்கினியாய் முதலுங்கடையுமின்றி நித்தமாயுமிருப்பன. அவை : "அவீசி கூர்மி அவ்வியக்தி......அராளகி மிசிரகேசி விசுவரூபி கூாத்ரி இத்தியேவா அஷ்டம காச்சுவாலாக்கினி தூமகேதுः"; இது மகாசாத்திரப் பிராகிருதமாகதம்.

இவை எட்டுநெருப்பும் புறப்பட்டு ஆகாசத்துச் சோதிமண்டலாக்கினியுடன் ஊடுருவிப்போய் உலகத்தின்கவிப்பான பிரமாண்டப்புறத்துப் பரமாகாசம் உருகும்படியாக யுகாந்தகாலத்தில் அக்கினியான ஊழித்தீயுடன்கூடி ஒக்கவந்து படையேறினவென்றவாறு.

கலகம் - நரகம் ; கேட்டுக்கும்பெயர். எரிகதிரென்றதை ஆதித்தனென்பாருமுளர் ; அதற்கு இஃது இடமல்ல. உலகக் கவிப்பென்னும் பெயர் சக்கரவர்த்திகள் தாம்படைத்த திரிசொல்லெனவுணர்க. பண்டு நம்பிகாளியார் கடற்குப்பெயர் மறுவென்றிட்டு எறிதலும் கூர்த்தலும் திரைத்தலும் உடையதென்றார்; அது போலுமிதுவென்க. (உகங)

458. பலவெற்பெடுத்தடவி பறியப்பறித்துநதி பலவாரிநீர்
விலகிப்புடைப்பவிட விவைகைப்படுத்தனிலன் விளையாடவே.

பறியப் பறித்தல் - வேரோடும் பறித்தல். விலகுதல் - எறிதல். புடைப்பவென்றதை நீர்தான் தன் விசையாற் புடைப்பவெனக் கொள்க. விடவென்றது விட்டென்னும் எச்சவீறு திரிந்ததென்பாருமுளர்; விடவி வை யெனப்பிளந்து, விடவி - விருட்சம், வை - வைக்கோல் ; இவையெல்லாம் தனதுகைப்படுத்து வாதராசன்விளையாடி வர

---

* களிறு - ஆண் சுறா; "கரியுஞ் சுறவுங் கேழலுங் களிறே" (பிங்கலந்தை, உடுஙசு), "கரியொடு சுறவு பன்றி களிறெனக் காட்ட லாமே." சூடாமணி. ங: ஙஉ.

21

வென்றுகொள்க. அனிலம் - காற்று; அதனையுடையவன் அனிலன்; வினைக்குறிப்புச் சொல்லு. (௨௧௪)

459. தொழின்மிக்கசெக்கரெரி சுடரிட்டெரித்துலகுசுடுவார்கள்போல்
எழின்மிக்கிரட்டியறு வருமொக்கவர்க்கர்தம ரதமேறவே.

தொழின்மிகுகை - சாதிலிங்கம் ஊட்டின சிவப்புப்போல்கை. செக்கர் - சிவப்பு. எரிசுடர் - நெருப்பு; வன்னத்தாலும் ஒப்பர். உலகு சுடுவார்கள்போலென்றது உகாந்தகாலத்துத் தங்களையேபோலவென்றவாறு. எழில் - அழகு. இதில் மிகுகையாவது போர்க்கோலங்கொள்கை. இது வேதத்தில் ஆதித்தன்நிற்கும்படி சொல்லும் பிரகாரமென அறிக. இரட்டியறுவர் - பன்னிருவர். ஒக்கவென்றது ஒருவர்க்கொருவர் உற்சாகித்தா ரென்றவாறு. அர்க்கர் - ஆதித்யர். தமரதமென்றது, "தம ரத்னவாடை" என்றாற் போன்றது; தமவென்னும்பாடம் சொல்லுவார் அறியார். (௨௧௫)

460. குமுதப்பரப்புமிதழ் குவியப்பனிப்பதொரு குளிர்கூருமால்
அமுதக்கதிர்க்கடவுள் ரவிகட்கிரட்டிதனி யறைகூறவே.

குமுதவிதழ் குவிகைக்குக் காரணம் சீதமிகுதி. அமுதக்கதிர்க்கடவுள் - சந்திரன்; அமிர்தகிரணனென்பது அவன்பெயர். தனியென்னுஞ் சொல்லிற்குப் பன்னிருவரையும் என் சீதத்தாலே வெல்வேனென்பது கருத்து. (௨௧௬)

461. எரிகக்குமுக்கணின ரிடியொக்குமுக்குடுமி யெறிவேலினோர்
செருவிற்குருத்தெதிர்வர் சிலமுத்தெருத்தர்பதி னொருதேவரே.

எரிகக்கு முக்கணினரென்றது நிக்கிரகமல்லாது அனுக்கிரகிக்கமாட்டாத கண்ணினரென்றவாறு. முக்குடுமியெறிவேல் - சூலப்படை. முத்தெருத்தரென்றதனால்மகாதேவர் வாகனம் *இளமைநீங்காததெனவுணர்க. எனவே பதினொருவரும் ஈசுவரனைச் சாரக் காட்டும் வேடத்தரென உணர்க. (௨௧௭)

462. மறவைத்தனித்திகிரி வளையொத்திரட்டைநிதி வரவாளிலே
பறவைக்கழுத்தில்வரு மரியொத்தியக்கர்குல பதிபோதவே.

மறம் - வெற்றி. வை - கூர்மை. ரம். வளை - சங்கு. இவ்விரண்டிற்கும் உவமை பத்மநிதியும் சங்க ம்.

* "மழலைவெள்ளே றணியடிகள்", "பைங்கணதொருபெருமழலை வெள்ளேற்றினர்", "மழலையேற்றுமணாளன்" (தேவாரங்கள்); "வெண்ணுர் மழவிடையை மேல்கொண்டு." ஆதியுலா, ௩௪.

ஆளென்றது * நரனென்னும்பெயருடைய யக்ஷனை. ஏறிப்போதுவான் வைசிரவணன். நரனுக்கொப்புக் கருடாழ்வான்; வைசிரவணனுக்கொப்பு ஸ்ரீ விஷ்ணுக்கள். (உகஅ)

463. அரிகட்குவைத்தவெழு நரகக்குலப்பகுதி யணியேழினோ
டெரிகட்பணைத்தபட ரெருமைப்பகட்டின்மிசை யமனேறவே.

அரிகளாவார் ஆவடதரென்பார் சிலர்; அதற்குக்காரணம் அரி குலத்திலுரென்பது. இன்னம் அரிகள் புத்தியாகர்ஷணப் பொருளை அரிப்பரென்பார் சிலர். இனி அரிகளாவார் விஷ்ணுக்களென்பாருமுளர்; கள்ளென்பது பன்மை அடைசொல். எழுநரகப்பகுதி - நரகபாலராய் நரகிற் புக்காரை வியசனப்படுத்துவார் தொகுதி. இவரில் எழுபதிற்றேழு நூற்றுத் தொண்ணூறு வெள்ளத்தார் பிரதானர். இவருள் ஒருத்தர்க்கு ஒரு வெள்ளம் சேனையுண்டு. இதனை ஆநுஞகாஸ்டமானவேதத்திற் கண்டு கொள்க. இவர்களுடன் கூடவந்தான் யமராசன். எரிகண் - எரியுங்கண். படர் - தறுகண்மை. (உகக)

464. முடியிட்டுமுட்டவரு முதுகற்குவட்டுமலை முதல்காறும்வீழ்
இடியிட்டுவெட்டுவன வெரியிட்டுருக்குவன வினமேகமே.

எ - து: பூமியிலேநின்று சென்று தம்முடைய சிகரங்களான பல தலைகளாலே தங்களை முட்டுதற்குவருவனபோலும் மலைகளைக் கீழ் அடி ஊசிவேரளவும் விழப்பட்ட இடியுருமேற்றினாலே வெட்டவல்லனவாய் அங்குப்பிறந்த அக்கினியினாலே உருக்கவல்லவுமாயிருக்கும் மேகங்கள் இனமினமாகப்புறப்பட்டுப் படையெழுந்தன. எ - று.

வருமென்றது † வாராமரபின வரக்கூறுதலெனவுணர்க.

கிடாய்போல முட்டவருமலையைக் கிடாயை வெட்டுவதுபோல வெட்டிக்கொன்று பட்டபின்பு கிடாயைச் சுடுவதுபோல உருக்குவன வெனவுணர்க. (உஉ0)

465. கரியைத்தொகுத்துழுவை கருலப்பெருக்கிப்பயிர் கவர்பாளியோ
டரியைப்பரப்பியதி ரருவிக்குலக்கிரிக ளணிகூரவே.

எ - து: தம்பக்கலுள்ளயானைகளைத் திரட்டிப் புலிகளைநெருங்கப் பெருக்கிப் பிராணிகளைக் கொள்ளைகொள்ளவல்ல யாளிகளுடன் ராசசிங்கங்களையும் பரப்பி அருவியாலே முழக்கவல்ல பருவதகுலங்கள் அணி வகுத்து யுத்தத்துக்குச்சிறப்படைய. எ - று.

---

* "இருநிதிக் கிழவ னியக்கர் வேந்தன், வடதிசைத் தலைவ னரவா கனனே" (பிங்கலந்தை, கசுரு); நரவாகனனென்னும் பெயர்க்காரணம் இப்பொழுதுதான் விளங்கிற்று.

† தொல். எச்ச. சூ. உசு.

பெருக்கியென்றது நெல்லைப் பெருக்கியென்றாற் போலத் திரட்டியெனவுணர்க. (உஉக)

வேறு.

466. தொக்கமேக மாகவெளி சுற்றுமோடி மூடிவன
துர்க்கம்யாவும் வேவவெரி துற்றுவேறு மேறுகொடு
மிக்ககோடு கோடிபல வெற்பநேக பாகைபட
வெட்டிவாரி வாரிவர விட்டுவீசி மேல்விழவே.

எ - து: முன்னம் என்றாற்சொல்லப்பட்ட மேகமெல்லாம் திரண்டன; திரண்டு ஆகாசவெளியைச் சுற்றும்போய்மூடி வனதுர்க்கமுதலாகக் கொண்டு நிரைத்து உலகிற்கோடிகளெல்லாம் வேவ நெருப்பைச்செலுத்தி முற்படஇடித்துப் பின்னை வேறுபட்ட உருமேற்றுக்களாலே மிக்க கவடுகளையுடைய கோடிக்கணக்கான பலமலைகளை வென்று அநேகம்பிளவுபடவெட்டிச் சமுத்திரசலத்தை வாரிவிட்டு மேலேவீசி மேல்விழ. எ - று.

எனவே வனதுர்க்கம் கிரிதுர்க்கம் சலதுர்க்கமென்னப்பட்ட மூன்று அரணங்களையும் மேகங்களே அழித்தனவென்றவாறு.

அநேகம் பாகை யென்றனவிரண்டும் ஆரியச்சொல்; ஒன்றல்லது பலவென்பது தமிழ்நடையெனவுணர்க. (உஉஉ)

467. பைத்தசோதி யாறிருப திற்றுநூறு காயவிரை
பச்சைவாசி நாலிருப திற்றுமேலு நாலுறழ
அத்தசால மீரருகு மத்ரசாலம் வீசிவர
வர்க்கத்வாத சாதிபரி ரட்டியாறு தேர்விடவே.

எ - து: சோபித்தசோதி பன்னீராயிரமும் உஷ்ணஞ்செய்யக் கடுப்பினையுடைய பச்சைவன்னக்குதிரைகள் எண்பத்துநாலும் பொருதுவரக் கைகளின் விசாலம் இரண்டருகும் ஆயுதப்பரப்புக்களை வீசிவர ஆதித்தர் பன்னிருவரும் பன்னிரண்டுதேர்களை மேல்கொண்டு வரவிட. எ - று.

பைத்தசோதியென்றதனைப் பசுமைநிறமெனக் கொள்வாருமுளர்; அது பொருளன்று; ஆதித்தர் சிவந்தல்லதிரார்; *"பைத்த பாம்பின் றுத்தி யேய்ப்ப" என்பது கொள்ளாராயின், "மலைதோன்றப் பைத்தகமெரிப்பவும்" என்பது கொள்வாராக; இது குண்டலகேசி. அத்தம் - கைகள். அத்தசாலமென்றதில் சாலமென்றது விசாலமென்பதனைத் தலைக்குறைத்தவாறு. அத்திரசாலம் - அத்திரக் கூட்டம். (உஉ௩)

* பொரு௩. ௬௯.

றுரையாசிரியர் (புறநா. க - உரை); 'பேயும் பூதமும் பாம்புமீருகிய பதினெண்கணம்' என்பர் பேராசிரியர்; தொல். பொ. உ௫சு - உரை.

137. மூ. சக்ரகிரிபுரிசை: "கொடும்புரிசை நேமியோ கொற்றப் போர் நேமியே" (தக்க. 118.) காவலொரு சூலம்: "சக்கரந் தண்டு சூலஞ் சலியாத காவலே." பாசவதை. க௫௫.

138. மூ. மகோதரர்திகள்: மகோதரர், குண்டோதரர், வியாக்கிர முகர், கும்போதரர், விசித்திரகர்ணர், சிங்கமுகர், கசகர்ணர், பட்சபாட்சர் முதலாயினோர்; தக்க. 473 - ஆம் தாழிசையுரையைப்பார்க்க. மகோதரா திகள் புரக்கப் பூதநாயகர் முறை வாயில் புகுதுவார் என இயைக்க.

உரை. ஐவகைப்பூதத்துக்கும்......சதாசிவர்கள்: தக்க. 113-குறிப் பைப் பார்க்க.

139. உரை: சருவாண்டங்களானகோயில்என்பது "கூறுவேதமுஞ் சூழுதற்கருங் கோயிலுக்குநா னளவை கூறுகேன், ஆறுநாலுதிக் குள்ள நீளமே யம்மைகோயிலுக் களவையாவதே" (பாசவதை. க௫௦) என்பத னுலும் உணரப்படும்.

140. மூ. புறம்புநீர் - பெரும்புறக்கடல்.

141. மூ. குழை - தளிர்.

உரை. அட்டமூர்த்தி: "எண் கூறவனொரு பேருரு." தக்க. 452.

142. மூ. சோலை: "மதிமிசை யிடைவிளங்கு சோலையது." தக்க. 146.

145. உரை. ஏகோதகம் - ஏக உதகம்.

146. மூ. அரிதனி துயின்றதோரிலையில்: 148 - ஆம் தாழிசை முற்றும் இங்கே அறிதற்பாலது; "வைய முண்டுதனி துஞ்சுமால்" (தக்க. 646.) அவையிருந்த: "அவையிருந்த வரசர்." வி. பா. வாரணுவத. சுக.

உரை. மகாதேவரான.........நிழலிலேயுடையது: "நாயனுர், ஐய முண்டுதரு மம்பணித்தருளு மாதியால்." தக்க. 646.

147. மூ. பதங்கள் - உலகங்கள்.

148. மூ. இத்தாழிசையுடன், "அகில வண்டமும் வயிறொரு சிறு புரை யடைய வுண்டபி னளவறு புவனமு மடியி லொன்றினி லமைவர நமையரு ளயனை யுந்தியின் மலர்மிசை யருளிய, முகில்க ருங்கட லறிது யில் கொளுநெறி முறைப யின்றது மதில்வரு மொருசிலை முதிர்வின் மென்றளிர் நுனியினு னுனியெனின் மொழிவ தெங்ஙன மதன்வளர் பனை யையே" (பாசவதை. க௬௫) என்பது ஒப்புநோக்கற்பாலது.

151. உரை. மிடற்றுப்பயனையுடைய......கின்னர மிதுனபட்சி: தக்க. 114 - குறிப்பைப் பார்க்க.

152. மூ. இத்தாழிசையிலுள்ள எதுகைநயமே, "பைந்நாக மெட்டுஞ் சுடரெடுப்பப் பைந்தறுகட், கைந்நாக மெட்டுங் கழல்வணங்க" (ஆதி. ௩௧) என்பதிலும் காணப்படுகின்றது.

154. மூ. மா - திருமகள்.

உரை. ரூபாவதாரம்: தருமகீர்த்தியென்பவரால் இயற்றப்பெற்ற ஒரு வடமொழி வியாகரண நூல். இது சோழர்கள்காலத்தில் பெரும்பான்மையாகப்பயிலப் பெற்றுவந்ததென்று சிலாசாஸனங்களால் தெரியவருகின்றது. திவாகரன் - பகலைச் செய்பவன். பண அமிதம்=பணாமிதம்: தீர்க்கசந்தி. பாற்கடல் படத்திற்கும், சூரியன் இரத்தினத்துக்கும் உவமை. ஆதிசேடன் வெண்ணிறமுடையவனென்பது இங்கே அறியற்பாலது; 282 - ஆம்தாழிசையில் சேடன்படங்களுக்கு வெண்டாமரையை உவமைகூறியிருத்தல் இதனைப்புலப்படுத்தும்.

155. மூ. வேகநஞ்சருமதிப்பிளவு: "குடபாலின் முளைத்தது கண்டு குணங்க டேயோன், வடவாவன லன்றெனின் மண்பிடர் வைத்த பாம்பின், விடவாளெயிறு" (கம்ப. மாரீசன்வதை. ௧௩௪), "திங்களின் பகிர்புரை நஞ்சம் பில்கெயிறு." திருவிளை. நாகமெய்த. ௧௫.

உரை. காளியும்.........தூதியும்: காளி, காளாத்திரி, யமன், யமதூதியென்பர்; மூநூ. ௧௪௮ - ௩.

156. மூ. தராதரப்புயமென......மேருவின்பாராரையிற் பெரியதே: "வடமேருத்தன்னெழி லழிப்பர்திர டோளின்வலி தன்னால்." கம்ப.

157. மூ. இத்தாழிசையில் வாடையும் தென்றலும் சாமரையாகக் கூறப்பட்டவாறே, 339 - ஆம்தாழிசையிலும் கூறப்படும்.

உரை. விநியோகப்பட்டு - உபயோகப்பட்டு. இருக்கும்படி - வீற்றிருக்குந் திருக்கோலம்.

159. மூ. புற்கிட - பொலிவழிய; "வாளற்றுப் புற்கென்ற கண்ணும்" (குறள். ௧௨௬௧.) இருதனு: இந்திரவில் இரண்டெனவென்பதை, "வானில்வந் திட்டவிற்க ளிரண்டு" (தக்க. 160), "வடுத்தவிர் விசும்பிற் செல்லும் வார்சிலை யிரண்டும் பற்றி", "கோட்டுடைக் குழவித் திங்கள் குனிசிலை யிரண்டு மானின், சூட்டுடை நுதற்கொவ் வாது தொலைந்து போய்த் தொல்லை வான, நாட்டிடைக் கரந்துந் தோன்ற நணுகியுந் திரியும்", "இருணிற விசும்பினி லிடைய றுமலே, வருசிலை யிரண்டையும்" (கந்த. திருவிளை. ௨௬, மாயைப். ௪௦, இந்திரபுரி. ௫௬), "இந்திரற்குத் திருமதலை மன்ற லெண்ணி யாதவர்கோன் வளம்பதியி லெய்தினொன்,

றந்தரத்தை நீலத்தால் விதான மாக்கி யண்டமுற விடிமுரச மார்ப்ப வார்ப்ப, வந்திரட்டை வரிசிலையாற் பஞ்ச வண்ண மகரதோ ரணநாட்டி" (வி - பா. அருச்சுனன்றீர்த்த. ருக) என்பவற்றால் அறியலாகும்.

161. பூ. இதிற் கூறப்பட்ட செய்தி திரிபுரஸம்ஹாரத்தில் தேவி செய்த உதவியைக் குறிக்கும்.

தண்டம் - கதாயுதம்.

உரை. வீரகாளி: "வீரியைமுன் படைத்தார் போலும்." தே.

162. பூ. இது சூரபன்மா யுத்தத்தில் தேவி செய்த உதவியைப் புலப்படுத்துகின்றது.

வயிறு - நடுவிடம்.

உரை. சூரபன்மா துரகவங்கிசத்தின்முதல்: தக்க. 231 - ஆம் தாழிசையையும் அதனுரையையும் பார்க்க.

163. பூ. இஃது இராமராவணயுத்தத்தில் தேவி ஆற்றியவுதவியை உணர்த்தும்.

கடல்சுடுவதென்றது, இராமர் சேதுபந்தனம் செய்வதன்முன் வருணனைஅழைக்க அவன்வாராததுபற்றிச்சினந்து கடலில் அம்பெய்ததைச்சுட்டியபடி.

164. பூ. தேவாசுரயுத்தத்தில் தேவிஅருளிய உதவி இதிற் சொல்லப்படுகின்றது.

சங்கிற்குச் சந்திரனை உவமைகூறுதல் மரபாதலால், 'நிலவொளி விரிய வருமொரு பணிலம்' என்றார்; "சங்கு திகிரி சந்த்ர சூரியர்." தக்க. 700.

165. பூ. எனையபலர்: "எனைப்பலவுமே" (தக்க. 729.) பலரிரணியரொனும்......உகிரி: "கோகனக ளுள்பெறு கொடுங்கனக னுகமிரு கூறுபடுகூ, ரேகநக நாயகி." தக்க. 167.

166. பூ. தேவியானவள் பசுமைநிறமுடையாளென்பதை, "பச்சை விளக்கே" (தக்க. 308), "இச்சைப்படி தன்போற மெண்ணுறன்கும் வளர்க்கும், பச்சைக்கோடி" (வி.- பா. அருச்சுனன்றீர்த்த. கங) என்பவற்றால் அறியலாகும். ஆன: வினைமுற்று.

167. பூ. கோகனக.........நாயகி: தக்க. 165.

168. பூ. தெய்வ மகளிரெழுவரும்: "கொம்மை முலைமருங் கெழுவர் குமரிமார்" என்பர் பின்னும்; தக்க. 351.

உரை. பெண்டாட்டி - பெண்: "மழையுமஞ்சும் வளியும் போலுஞ் செலவினொளொரு பெண்டாட்டி" (தகடூர்யாத்திரை.) தேவி மாயாசக்தி என்றது போலவே, 'என்றும் மயக்கிவருகிற மாயாசக்தியான எனக்கு'

(தக்க. 301 - உரை) என்றும், "ஒரு மருங்குடைய மூலநாயகி" (தக்க. 778) என்றதில் மூலநாயகி யென்பதற்கு, 'மூலப்பிரகிருதியான மாயா சக்தியை' என்றும் பின்னுங்கூறுவர். 'மகாமாயா' என்பது லலிதாஸஹஸ்ர நாமத்தில், உகரு-ஆம் திருநாமம். 'படைத்தவர்கட்கு முதல்வி' என்பது, "பிரமற்குமம்மனே", "மூலநாயகி" (தக்க. 77, 778) என்பவற்றாலும் அறியப்படும்.

169. மூ. வள்ளி வதுவை மணமகிழ் பிள்ளை: "வள்ளி கணவன்" (தக்க. 170.) சொல்லு - சொல்லுக. அல்லி - அகவிதழ்.

உரை. மகாசமயஆசிரியரென்றது, சைனசமயமுதலிய பலசமயஆசிரியர்களைக்குறிக்கும்பெயராயினும் இங்கே சைனசமய ஆசிரியர்களைச் சுட்டிற்று. மந்திரவாதவிவாதம்: மந்திரவாதம் - மந்திரசக்தியினால் ஓர் அரியசெயலைச் செய்வது; "தந்திர மிக்க முந்தையோர் சோழன் றனையால் வெல்லமாட் டாமல், மந்திர வாதஞ் செய்து", "மன்றுநீ டசோக நீழன் மந்திர வாதஞ் செய்ய", "மறமலி யமண ரெல்லாம் மந்திர வாதஞ் செய்து", "மந்திர வாதஞ் செய்த மானமில் சமணர்." திருவால. உசு: உ, ரு; ௩௬: உ, உரு.

ஆளுடையபிள்ளையார் முருகக்கடவுளென்பது, இந்நூலாசிரியர் உரையாசிரியர்களுடைய கொள்கை. அருணகிரிநாதர் முதலியோர்களும் இக்கொள்கையையுடையவர்களே; "புழுகொழுகு காழி கவுணியரின் ஞான புனிதனென வேடு தமிழாலே, புனலிலெதி ரேற வமணர்கழு வேற வமர் பொருத வீர குருநாதா", "பாலரூத்திரு வாயா லோதிய வேடுநீர்க்கெதிர் போயே வாதுசெய் பாடரூற்றிரு நாலா மாயிர சமண்மூடர், பாரின்மேற்கழு மீதே யேறிட நீறிடாத்தமிழ் நாடீடேடிடப் பாதுகாத் தருளாலே கூனிமி ரிறையோனும், ஞாலமேத்திய தோர்மா தேவியு மாலவாய்ப்பதி வாழ்வா மாறெணு ஞானபாக்கிய பாலா வேலவ மயில்வீரா." திருப்.

170. மூ. ஐயை: தக்க. 243, 410. கழுமலம்உய்ய: "வளர் காழிப் பதிவாழ......சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார்", "காழி வாழவந் தருளிய கவுணியர் பிரானும்." பெரிய. திருஞான. உரு - உசு, சுஎ௩.

உரை. கருவம்......என்பது: 5 - ஆம்தாழிசையையும் அதனுரையையும் பார்க்க. 'வைதிகவாழ்க்கைபெறுவது' என்னுங்கருத்து, "வேத நெறி தழைத்தோங்க......அழுத......திருஞான சம்பந்தர்", "பரசமயத், தருக்கொழியச் சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க" (பெரிய. திருஞான. க, உஉ) என்பவற்றாலும்அறியப்படும். அமணர் தாமே கழுவேறினு

ரென்பது 7 - ஆம்தாழிசையாலும் அதன்உரை குறிப்பு முதலியவற்றாலும் விளங்கும்.

171. மூ. பொன்னிநாடு - சோழநாடு. மதுராபுரித் திருவாலவாய்: திருவாலவாயென்றது சோமசுந்தரக்கடவுள் எழுந்தருளியிருக்குந் திருக்கோயிலை; "தேசொடுவான் முகடுதொடுஞ் செழுமணிக்கோ புரமிலங்கு, மீசனுறை திருவால வாயிதுவே யெனக்காட்ட." திருவால. ௩எ : ௨ரு.

172. மூ. பரசமயகோளரி: "விரவும் பரமத கோளரியே", "தாளரிக்கு மரியா னருள்பெற்ற பரசமய கோளரிக்கும்" (ஆளுடைய பிள்ளை. திருவந். ச, ருச), "பரமகுரு நாதன்மிகு பரசமய கோளரியே", "பண்டித ரின்பன் பரசமய கோளரியே" (ஆளுடைய பிள்ளை. திருக்கலம். உச, ௩எ), "பார்குலவு தனிக்காளஞ் சின்ன மெல்லாம் பரசமய கோளரிவந் தானென் றூத" (பெரிய திருஞான. ௧௦௪), "பரசமய கோளரியைப் பாலறு வாயனை," காஞ்சிப். கடவுள்.

173. உரை. "இராசாக்கினையில்லையோவென நினைத்து" என்றது, "அரசனிங் கில்லை கொல்லோ" (திருவிளை. மாமனாக. உக) என்பதனை நினைப்பிக்கின்றது.

174. மூ. 'சினத்தொடு அக்கனல் சென்று' என்றதும் அதனுடைய உரையும் துணைவலி இன்றியமையாததென்பதைப் புலப்படுத்துகின்றன.

175. உரை. பற்றினவாறே - பற்றினவுடனே; கட்டினவாறே - கட்டினவுடனே; 'கண்டவாறே', 'திருநீறிட்டவாறே' என்பர்பின்; தக்க. 185, 196 - உரை.

176. மூ. இத்தாழிசையுடன், "பீலி வெந்துய ராலி வெந்தவ சோகு வெந்தமண் மூகர் நெஞ்சிடை பீதி கொண்டிட வாது கொண்டருள்" (திருப்.) என்பது ஒப்புநோக்கற்பாலது.

177. மூ. இரண்டுகண்களுமொத்தபேர்: மந்திரி அரசனுக்குக் கண் போல்வானென்பதை, "சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன், சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்" (சசரு) என்ற குறளும் அதனுரையும், "கற்பலர் கொடியன் னாருந் தென்னவன் கண்போல் வாரும்" (திருவிளை. பாண்டியன் சுரந்தீர்த்த. உரு) என்றபாடலின்கருத்தும் வலியுறுத்தும். மனைவியும், "விறன்மந் திரிமதியும்" (தனிப்.) என்பதற்கேற்பக் கணவனுக்குமந்திரிபோன்றவளாதலின் அவளொடு மந்திரியையும், 'இரண்டு கண்களுமொத்தபேர்' என்றார். பேர் - ஆண்பெண் இருபாலாரையும் சுட்டும் ஒருபெயர்; "தங்கள் காரியப்பேர், ஆர்தட்டினும்." படிக்காசுப் புலவர்பாடல்,

உரை. பெருநம்பிகுலோற்பவர்: "பெருநம்பி குலச்சிறை." தக்க. 211.

179. உரை. தலைவன் துஞ்சினால் உடன்துஞ்சுவது கற்புடைமகளிர் இலக்கணமாதலால் இங்கே, 'இராசாதுஞ்சின் உடன் துஞ்சஇருந்தார் நம்பிராட்டியார்' என்றார்; "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா, தின்னுயி ரீவர்" (மணி. உ: சஉ - ச); இவ்வாறு இறத்தலை மூதானந்தமென்பர்; பு. வெ. பொதுவியற்படலம், கூ. போசராசாவங்கிசோற்பவர்: முடிமன்னர்களிடமுள்ள அதிகாரிகளிற் சிலர் தங்கள் அரசர்களுடைய பொதுப்பெயரோடு போசனென்றபெயரை யும் பெற்றிருந்தார்களென்று சிலாசாஸனங்களால் தெரிகின்றது. அவர்கள் இங்கே கூறப்படும் போசராசாவங்கிசத்தவர்போலும்; "மும்முடிச் சோழபோசன்": குமாரப்பட்டம் - அரசகுமாரர்களுக்குக் கொடுக்கும் பட்டம். வாசி - வேறுபாடு; "வாசிதீரவே, காசுநல்குவீர்." தீருஞா. தே.

180. உரை. முதலி - முதல்வன்: 'எங்களுக்கு முதலிகளுளரோ' (தக்க. 301 - உரை), "முன்வரு முதலி யல்லையோ" (பெரிய. கண்ணப்ப. ககஎ), "மூவாத பேரன்பின் மூவர் முதலிகளுந், தேவாரஞ் செய்த திருப் பாட்டும்." ஏகாம்பரநாதருலா, எஅ.

181. உரை. முத்து எட்டிடங்களிற் பிறக்குமென்பது, 340-ஆம் தாழிசை யுரையாலும் அறியப்படும். எட்டிடத்திலும் சிறப்புடையது கடலென்பது, "சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை, நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யும்" (கலி. அ: கரு - கூ) என்பதற்கு 'தலைமைபொருந்திய வெள்ளிய முத்துக்கள்.........கடலிடத்தே பிறந்தன வாயினும்......கொடுக்கும்' (ந.) என்றெழுதிய உரையாலும் அறியப்படும்.

182. மூ. இத்தாழிசையுடன், "இந்திரற்குத் திருமதலை மன்ற லெண்ணி யாதவர்கோன் வளம்பதியி லெய்தி னானென், றந்தரத்தை நீலத்தால் விதான மாக்கி யண்டமுற விடிமுரச மார்ப்ப வார்ப்ப, வந்திரட்டை வரிசிலையாற் பஞ்ச வண்ண மகரதோ ரணநாட்டி வயங்கு மின்னான், முந்துறத்தீ பமுமெடுத்துத் தாரை முத்தான் முழுப்பொரிசிந் தினகால முகில்க ளம்மா" (வி. பா. அருச்சுனன் தீர்த்த. ருக) என்னுஞ் செய்யுள் ஒப்புநோக்கற்பாலது.

183. உரை. சுவர்க்கமென்பது மேலுலகங்களெல்லாவற்றிற்கும் பொதுப்பெயர். க்ஷணபங்கம் - கணத்திற்றோன்றியழிதல். சோதி சாத்திரம் - சோதிட சாத்திரம். இம்மண்டலங்களையெல்லாம் - இந்தச் சமய ஆசிரியர்களுடைய தொகுதிகளெல்லாவற்றையும். தீர்த்தத்தார் - தீர்த்தங்காரர்; இருபத்து நான்கு தீர்த்தங்காரர்களுடைய பெயர்களையும், 375-ஆம் தாழிசை உரையிற் காணலாகும். ஸ்ரீ வாரணசி - காசி.

184. மூ. இதன் சொல்லும்பொருளும், தக்க. 176-ஆம் தாழிசையோடு ஒப்பு நோக்கற்பாலன. சுறுநாறல் - தீப்படுகின்ற தசை மயிர் முதலியவற்றிலிருந்து உண்டாகும் கெட்ட நாற்றம்; "வெம்பாற் சுறுநாறும் வியன் சுரத்தே" (ஆளுடையபிள்ளை. திருவந். உரு), "நிணங்கருகிச் சுறுநாறு முடையி னுலும்." அரிச்சந்திர. மயான. ௩௫.

185. மூ. பொறை சூழ் வரையிற் புலியேறெழுதும்............பெருமான்: (தக்க. ௪); "வடமேருப், பொன்மலை மார்பும் புலிபொறித் தோன்", "மேரு வரையிற் புலிபொறித்து மீண்டனாள்." இராசராச. கன, எசு.

உரை. கண்டவாறே - கண்டவுடன்; தக்க. 175 - உரையைப் பார்க்க.

187. மூ. மாமன்மரபிற் பகன்மண்டிலம்: "பகலோன் மரபிற் பெறுபைந் தொடியே", "தவனன் குலவல்லி" (தக்க. 204, 207) என்பர் பாண்டிமாதேவியாரை. மாமன்: "மாமான் மகளே" (திவ். திருப்பாவை, ௯), "மாமான் சூட்டொடு கண்ணி யன்றே" (சீவக. ௪அ௪), "தேர் வேந்தர் மாமன்." பெருந். பாரதம். உத்தியோக.

உரை. சுவாமி - கணவன். சைத்தியம் - குளிர்ச்சி.

189. மூ. சமண்மூகர்: 7 - ஆம்தாழிசைக் குறிப்பைப்பார்க்க.

உரை. (க) சம்பிரமித்த - திருப்தியுற்ற.

(உ) ஊமர்கள் பிறவிச்செவிடர்களென்பது இங்கே அறிதற்பாலது.

190. மூ. சோழியவைதிகனும்: ஆம் - இழிவைக்காட்டும் ஓரிடைச்சொல்; "விடுவித்தன னுமிவன் வேதியனே" (தக்க. 197), "கைத்தோடுஞ்சிறை கற்போயை, வைத்தோ னின்னுயிர் வாழ்வானும், பொய்த்தோர் வில்லிகள் போவாராம், இத்தோ டொப்பது யாதுண்டே" (கம்ப. சூளாமணிப். ௪௧), "ஒருவனும்......தனதனுகுமாம்", "அடுப்பனும்......ராசனும்", (வி. பா. மணிமான், அ௦, அக), "அன்னையானவருமிருவராம்...... என்கொலாம்." ஷெ. கண்ணன்தூது. கஉ௪.

191. மூ. முனிபுங்கவரோரெண்ணுயிரவர்: "எண்ணுயிர மூகரும்", "எண்ணு யிரவர்க் கெளியரோ" (தக்க. 204, 219), "நாமொருவ ரவ ரெண்ணு யிரவர்", "செற்றமில் சமண ரெண்ணு யிரவர்", "எற்றருந் தலைவ ரெண்ணு யிரவர்", "தருக்கமார் சமணர்......வெண்ணுயிரர்", "கோளுறு சமண ரெண்ணு யிரவரும்", "தளம்புநெஞ் சுடைய வெண்ணுயிரஞ்சமண் டலைவ ராயோர்." திருவால. ௩அ: ௩, ௯, கஅ, உக, ௩உ, ௪௯.

193. மூ. உறிவல்லமணீர்: "உறித்தலைச் சுரையொடு குண்டிகை பிடித்து." திருஞா. தே.

194. மூ. சைவசிகாமணி : "மொழிவது சைவ சிகாமணி மூரித் தடவரைத்தோள்" (ஆளுடைய பிள்ளை. திருவந். கக), "கண்ட சைவ சிகாமணி" (திருச்சண்பை. க), "சைவ சிகாமணி சம்பந்தன்" (ஆளுடைய பிள்ளை. மும்மணி. கங), "மாமறை நாவலர் சைவசிகாமணி." ஆளுடைய பிள்ளை. திருக்கலம். கரு.

உரை. ஏயென்பதற்குச் சாமவேதமெனப் பொருள்கூறுவர் பரிமேலழகர்; பரி. ங; சஉ - உரை. இசை மகாதேவர்: "ஏழிசையை" (திருநா. தே.) சேயேயென்பதற்கு எழுதிய தூரியாவென்னும் பொருளுடன், "புறத்தார்க்குச் சேயோன்" (திருவா. சிவபு.), "தீதில்வா வாக திரு நின்வரவு சேயோய்" (கம்ப. சூர்ப்ப நகை. ஙஅ) என்பவற்றிலுள்ள சேயோன், சேயோயென்பவற்றின் பொருள்கள் ஒப்பிடற்பாலன.

196. உரை. திருநீறிட்டவாறே - திருநீறிட்டவுடனே; தக்க. 175-உரையைப் பார்க்க. பெருமாளென்றது......ஸ்ரீ ராமன் வங்கிசமாதலால்: "ரகுமரபிற் பொன்" (தக்க. 211) என்பதற்கு, 'ராகவ வங்கிசத் திற்பொன்' என்று உரையெழுதியிருப்பதும் இங்கே உணரற்பாலது. பெருமாள்: சோழர்களுடைய இயற்பெயர்களோடும் சிறப்புப் பெயர்களோடும் இச்சொல்லைச் சேர்த்து வழங்குவதும், தனியே வழங்குவதும் மரபென்பதைச் சிலாசாஸனங்களாலும் பழைய தமிழ்நூல்களாலும் அறியலாம்; "தெய்வப் பெருமாளை வாழ்த்தினவே", "பெரிய பெருமாளை வாழ்த்தினவே" (தக்க. 772, 773); "உலகிற் பெரிய பெருமாள்", "வளவர் பெருமாள்", "பெருமாள் பவனி யெழுச்சி", "திருவுலாப் போதும் பெருமாள்", "பெருமாளுங் கொற்றக் குடைக்கீழ்......யானைமேல் வந்தான்", "ஞாலத்தோர் தெய்வப் பெருமாளும்" (குலோத். உலா); "பெரும்பெருமாள்", "யானைப் பெருமா ளயிரா பதத்திருந்த, தானைப் பெருமாளைச் சந்தித்தாள்", "பெருமாள் விரும்பேர் புதுக்கன்னி", "தெய்வப் பெருமாளும்", "பேரேற்ற தெய்வப் பெருமாளும்." இராச ராச.

199. மூ: கெட்டேனடிகள் : "கெட்டேனடிகேள்" (தக்க. 207); கெட்டேன் : இரக்கக்குறிப்பு.

உரை. அடிகள் இவரென்பதற்கு, 'மகாதேவர் உறவாகிய இவர்' என்று உரையெழுதியது போலவே பின்னும், "அடிகேள்" (தக்க. 207) என்பதற்கு, 'சுவாமி உறவாயிருப்பீர்' என்றெழுதுவர்.

200. மூ. இளகுங்காடு: "இளகு காடிள கப்பரி கொண்டதே" (சீவக. கஎஎஅ), "இளகு காடகிற் சந்தனப் பொதும்பர்" (தணிகை. நாடு. ஙக.) கார்வந்து......ஒத்தனன்: "நீரற்ற புலமேபோற் புல்லென்றாள் வைகறை, கார்பெற்ற புலமே போற் கவின்பெறும்" (கலி. ஙஅ; கக - உ),

"வெயில்பொரா வாட்ட முற்ற மென்றளிர்ப் பசிய வல்லி, புயல்பொழி துவலை மாந்திப் பொங்கெழில் படைக்கு மாபோல்" (பாகவதம், உருக்குமணிமணத்திறம். உஅ), "காரிற் குளிர்ந்து குழைந்தசெழுங் கானம் பூத்த தெனக்கவினி." வி. பா.கஉ - ஆம்போர். அஉ.

202. மூ. சாதனம் - செய்யுமுறை.

203. மூ. புகுவிப்பது: இது புகுவிக்க என்னும் வியங்கோள் மாத்திரையாய் நின்றது. தெக்கணம்: இது தக்ஷிணம் என்ற வடசொல்லின் திரிபு; தெக்கிணம், தக்கணம் எனவும் வழங்கும்; "தெக்கிண மேரு வென்ன" (தக்க. 773), "தெக்கண மலையகச் செழுஞ்சேரூடி" (சிலப். கச: அக), "தக்கண மதுரை தான்சென் றெய்தி." மணி. கஙு: கoடு.

204. மூ. எண்பெருவெற்பு: இவற்றின்பெயர்களை 218 - ஆம் தாழிசையுரையால் அறியலாகும்.

205. மூ. சிலாவருடம் - கல்மாரி.

உரை. யானையைப் பெரும்பாம்பு விழுங்கு மென்பது ஈண்டறியற் பாலது; 543 - ஆம் தாழிசையையும் அதன் உரைமுதலியவற்றையும் பார்க்க. சுவாமி என்றது பாண்டியனை. ஆய்த்து - ஆயிற்று: 'சுவர்ணமயமாய்த்து' என்பர்பின்; தக்க. 217-உரை; "கூடிய கூட்டத்தினுளுள தாய்த்திக் குவலயமே" (ஆளுடையபிள்ளை. திருவந். அo); "போய்த்து" என்றார் கம்பரும்; கம்ப. சூர்ப்பநகை. கஙo.

206. மூ. செந்தமிழ்மண்டலம்: பாண்டியனைத் தமிழ்நாடன்என்பர் பின்; தக்க. 211; "தமிழ்நாட்டிற் போனார் ஞானத் தலைவனார்", "மண்குலவு தமிழ்நாடு", "பொங்கு தமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி", "தேம்பொழில்சூழ் சேந்தமிழ்நாட்டினில்", "செந்தமிழ்த் திருநா டெய்தி", "பூழியர் தமிழ்நாட் டுள்ள", "தண்டமிழ்நாட்டு மன்னன்" (பெரிய. திருஞா. உஅக, சoo, சகo, சகஉ; காரைக். சங; திருஞா. கூoக, எடுக.) குன்றங்களிகூர் மழைதங்தெனவந்தனை: 200 - ஆம் தாழிசையும் அதன்உரை முதலியவைகளும் இங்கே அறியற்பாலன; "கழைவளர் நவிரத்து மீமிசை ஞெரேரெனு, மழைசுரந் தன்ன வீகை நல்கி." மலைபடு. டுஎங - அo.

உரை. சயசய: "போற்றி போற்றி சயசய போற்றி", "போற்றி சயசய போற்றியென்னும்", "சயசய போற்றி போற்றி" (திருவா. போற்றித். உஉடு; திருச்சதகம், க, கூஉ), "சிந்தித் தவர்க்கருள் கணபதி சயசய" (பழையபாட்டு), "சயசய ஹரஹர செந்திற் கந்தப்பெருமானே." திருப்.

207. மூ. கெட்டேன்: 199 - ஆம்தாழிசையின் குறிப்பைப் பார்க்க.

208. மூ. சுட்டிக்கலன் : குழந்தைகளுக்கு முன்னுச்சிமயிரிற் சூட்டப்படும் ஒருவகை அணி.

209. மூ. திருமாலை நோக்கி வீரபத்திரதேவர் கூறுவதாகவுள்ள, "சங்க மெங்கள் குழை" (தக்க. 714) என்பது, இதனுடன் ஒருவாறு ஒத்துள்ளது; "தாமமு மெமது பவனனு மெமது தோழனைத் தோயமு மெமதே, யாமுமிங் கிவற்றே டொன்றுத லொழிந்து மீரிரு பொருள்களும் பிரிந்தான், மாமுகி லெனும்பே ரெங்குள தடர்த்து வாசவ னென்செயு மெம்மை, யாமுறை யறிது மென்றுகொண் டறவு மகங்கரித் தனன்வெகுண் டழலோன்" (வி. பா. காண்டவ. ௩௨) என்பதும் ஈண்டறியற்பாலது.

211. மூ. சமண்மூகர் : 7 - ஆம்தாழிசைக் குறிப்பைப் பார்க்க.

212. உரை. வைகை கடலிற்கலக்கவில்லையென்பது ஒருசாரார் கொள்கை; "மைக்கடலில் வைகலொழி வைகை" (திருவாதவூரர். மந்திரி. ௧), "அவனியெலா, முடுத்தகட லொருவர்க்கு முதவாத வுவரியென, மடுத்தறியாப் புனல்வைகை." திருவிளை. ௰அ : ௨.

213. மூ. கனலில் புகும் ஏடு பொற்பு உறவும் என இயைக்க.

215. மூ. விக்ரமம் - வெற்றி.

217. உரை. இரசவாதஞ் செய்வார் இரும்பு முதலியவற்றை உருக்கிப் பின்பு சித்தரசத்தால் வேதிப்பார் : "கருமருவு குகையனைய காயத்தி னடுவுட் களிம்புதோய் செம்பனைய யான் காண்டக விருக்கநீ ஞானவனன் மூட்டியே கனிவுபெற வுள்ளுருக்கிப், பருவமதறிந்துநின் னருளான குளிகைகொடு பரிசித்து வேதிசெய்து, பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட பட்சத்தை யென்சொல்லுகேன்" (தாயுமானவர்.) காணி - சிற்றெண்களில் ஒன்று : "முந்திரிமேற் காணி மிகுவதேற் கீழ்தன்னை, யிந்திர னெ வெண்ணி விடும்." நாலடி. ௩௪௬.

218. உரை. கணபதித்தொண்டர்கள் - இங்கே சிவனடியார்களின் தலைவர்கள்.

219. மூ. மண்ணுவுடம்பு : "காருடற் சமண்குழாம்" (தக்க. 373) என்பதன்உரையைப் பார்க்க; "மாசுகொண் மேனியாரும்" (திருஞா. தே.); "கழுவா வுடலம்" (ஆளுடையபிள்ளை. திருவந். ௬, ௨அ), "காயமு மனமு மாசு கழுவுதல் செய்யார்." பெரிய.

220. மூ. பிள்ளை - திருஞானசம்பந்தமூர்த்திநாயனார். அகிலகலாவல்லி - கலைமகள்; சகலகலாவல்லியென்றும் பெரியோர் கூறுவர்.

உரை. தேவி முன்னிருத்தல் எளிய செயலன்றாதலின் கலைமகள் அவ்வாறு இருக்கப்பெற்றது தேவிபிரசாதம் என்றார்.

## எ. பேய் முறைப்பாடு.

இதில், உணவுபெறாது பலராலும் வஞ்சிக்கப்பட்டதைப் பேய்கள் முறையிடுதலும் தாங்கள் கண்ட கனுக்களைக்கூறுதலும், யுத்தத்திற்குச் சென்றிருந்த பேய்களில் ஒன்று ஓடிவந்து பேய்களையெல்லாம் தன்னுடன்வரக்கூவி மிக்க விரைவாக மீண்டும் ஓட அதனைப்பிடித்துக் கொண்டு வரச்செய்து தேவி, தேவர்கள் அழிந்தவிதத்தைச் சொல்லும் வண்ணம் கட்டளையிடுதலும் கூறப்படுகின்றன.

முறைப்பாடு - தங்கள்குறையை நீக்கிக்கொள்ள விண்ணப்பித்தல்.

223. மூ. பரமசிவன் பிரமதேவன் தலையைக்கிள்ளித் தாமே எடுத்துச்சென்றார்; எமக்குக்கொடுக்கவில்லையென்பது குறிப்பு.

224. மூ. கணவனென்றது சிவபெருமானை.

உரை. களேபரம் - பிணம். விலகுதலென்றதற்கு, 458, 646 - ஆம் தாழிசையுரைகளிலும் இவ்வண்ணமே பொருளெழுதுவர்.

225. மூ. கூருக்கிஞலும் குத்திரூக்கிஞலும் திரிபுரத்திலுள்ள அசுரர்களின் உடம்பிஞல் எங்கள்பசியைத் தீர்த்துக்கொள்வோம். அதற்கிடமின்றி எரித்துச் சாம்பலாக்கி விட்டார். இஃது என்னஅநியாயமென்பது கருத்து.

226. மூ. குழம்பு அடியேம் - மனங்கலங்குகின்ற அடியேம்.

உரை. திருமலை - கைலை; தக்க. 309, 336.

227. உரை. நின்புலவனைப் போலக் கடலேழும் ஒருக்காலே குடியோமென்று ஈண்டுக்கூறியது, "முனிது மொனவெழு புணரிகள் மறுகவும்" (தக்க. 40) என்றதை நோக்கி; 233 - ஆம் தாழிசையையும் பார்க்க. அடிசிறப்பானையைத் தொட்டோமாவோமென்பது குளுரவு வகையுள் ஒன்று. மகாமேருவைப் பன்னிரண்டு சுற்றுக்கொண்டென்றது, "பொன்னெடு மலையைப் பன்னிரு வடங்கொடு, புணரியைக் கடைந்தநாட் புணர்த்த பன்னக, அரசன்" (தக்க. 645-மேற்.) என்னும் பழைய செய்யுளை நோக்கி. மகாமேருவை மத்தாகக் கொண்டது, 30 - ஆம் தாழிசையின் குறிப்பால் உணரப்படும்.

228. மூ. மலயமெனற்பாலது எதுகைநோக்கி மலயமென நின்றது. தொப்பையொரு பெருவயிற்றுப் பிள்ளையென்றது விநாயகக் கடவுளை.

230. மூ. தடா: "அண்ட கடத்தடா." தக்க. 769.

உரை. வங்கிசத்தாழ்வால் வந்த குணமென்றது கள்ளும் கறியும் உண்ணுவது குறித்து.

231. பூ. வஞ்சி - பகைமேற்செல்வோர் அணியும் மாலை. பேய்கள் யுத்தத்தில் இறந்தோர்களுடைய தசைமுதலியவற்றை உணவாகப் பெறுதலன்றிப் பிறுண்டு உணவு பெறுவென்பர்.

234. பூ. ஆண்டலை - பாலை நிலத்தில் இருக்கும் ஒருபறவை; ஆண்களுடைய தலைபோன்ற உருவையுடையது; "ஆண்டலை வழங்கும் கானுணங்கு கடுநெறி" (பதிற். உரு : அ), "ஆண்டலைக் கீன்ற பறழ்மகனே" (கலி.கூச: ௬),"அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்"(பட்.உருஅ), "ஊண்டலை துற்றிய வாண்டலைக் குரலும்" (மணி. ௬: எஎ), "கூகையோ டாண்டலை பாட" (காரைக். திருவாலங்காட்டுமூத்த. ௩), "யாமத் தீண்டிவந் தாண்டலை மாண்பில் வழைக்கும்" (நீல. தரும. ௩), "நீண்ட பலி பீடத்தி லரிந்து வைத்த நெடுங்குஞ்சிச் சிரத்தைத்தன் னினமென்றெண்ணி, ஆண்டலைப்பு ளருகணைந்து பார்க்கு மாலோ வணைதலுமச் சிரமச்ச முறுத்து மாலோ" (கலிங்க.), "நெடுந்தலை தழுவிச் சேர்ந்தன.... ......ஆண்டலை நிகர்த்தன." கம்ப.

236. பூ. பசியினம் - பசியையுடையேம். தண்டகாபதியைப்பாடுவோர் பசியற்றிருப்பாரென்பது இதனுற் போந்தபொருள்.

உரை. குளத்துளார்குடிப்பிறந்த பல்லவராயனுன நம்பிப்பிள்ளை: இவன்பெயர் சாஸனங்களில், * 'சயங்கொண்ட சோழமண்டலத்து ஆமூர்க்கோட்டத்து ஸ்ரீ குன்றநாட்டுக்காரிகைக்குளத்தூருடையான் குளத்துளான் திருச்சிற்றம்பலமுடையான்பெருமானம்பி' என்று காணப்படுகின்றது. இவனுக்குப் பல்லவராயனென்ற பட்டமுமுண்டு. இவன் இரண்டாம் இராசராசசோழனுடைய காலத்தில் ஒருபெரிய அதிகாரியாகவும் படைத்தலைவனுகவும் இருந்தான். இராஜாதிராஜவளநாட்டுத் திருவிந்தளூர் நாட்டுக் குளத்தூர் ஸ்ரீ இராஜராஜேசுவரமுடையார் கோயிலைக் கட்டுவித்தான். அந்தஊர் இவனுடைய பெயரால், 'பல்லவராயன் பேட்டை' என்று வழங்கிவருகின்றது. இரண்டாம் இராசராச சோழனுடைய இறுதிக்காலத்தில் அவ்வரசன் நோய்வாய்ப்பட்டிருக்கையில் அரசாங்கத்தை முற்றுங்காத்துவந்ததன்றி அவன் இறந்தபின்னரும் அவனுடையமக்கள் சிறுவர்களாக இருந்தமையின் நாட்டையும் அவர்களையுங்காத்துவந்து ஒரு புதியஅரசனை நியமித்துப் பின்னர் இரண்டாவது இராசராசன் குமாரனுகிய மூன்றுங்குலோத்துங்கசோழனுக்கு முடிசூட்டினுனென்றுதெரிகிறது. (Annual Report of South Indian Epigraphy, 1924.) இரண்டாம் இராசராசனுடைய காலத்தில்அரசனையொத்த நிலையிலிருந்தது பற்றியும் தம்மை மிகஆதரித்தது பற்றியும் இந்நூலாசிரியர் இங்கே இவனைப் புகழ்ந்தனர்போலும். இத்தாழிசையினுலும் உரையாலும் இந்த நம்பிப்பிள்ளை

* சயங்கொண்ட சோழமண்டலம் - தொண்டை நாடு.

தொண்டைநாட்டு வேளாண்மரபிற் பிறந்தவனென்றும், சிறந்த கொடையாளியாக இருந்தானென்றும், சேரனை வென்றானென்றுந் தெரிகின்றது. சேரர்களோடு இராசராசசோழன் பொருது வெற்றியடைந்தது, இந்நூல் 800 - ஆம் தாழிசையாலும், "உதியர், இடப்புண்ட பேரிஞ்சி வஞ்சியிலிட்ட, கடப்ப முதுமுரசங் காணீர்" என்ற இராசராசசோழனுலாக் கண்ணியாலும் அறியப்படுகின்றது.

237. மூ. இத்தாழிசையினால், காவிரிப்பூம்பட்டினம் சோழனுடைய தலைநகர்களில் முக்கியமானதொன்றென்றும், அங்கே சோழனுக்கு வெற்றியைத் தந்த சிலவீரர் இருந்தனரென்றும் தெரியவருகின்றது. இரண்டாம் இராசராச சோழன் காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டிருந்தானென்பது, "தென்மாடக் கூடற் சிறைமீட்ட கார்புகாரிப், பொன்மாட வீதிப் பொடியடக்க", * "கூடற் பெரும்பெருமாள்", "பாவி விறலியரும் பாணருந் தற்சூழ்ந், திரவி புகார் பாடுமெல்லை", "பட்டினஞ் சூழ்ந்த பொன்னிக்கும்" (இராசராச.) என்பவற்றால் உய்த்துணரப் படுவதன்றியும், * "கூட, னராதிபன் கூத்தனெதிர் நண்ணியோர் கண்ணிக், கொராயிரம்பொ னீந்த வுலாவும்" (தமிழ் விடு தூது) என்பதனாலும் அறியப்படும்.

239. உரை. கனவிடுத்தல் - கனவிற் கண்டவற்றை விளங்கச் செய்தல். புனருத்தி - கூறியது கூறல்.

240. உரை. முளரியென்பதனைப் பிரமலோக மெனினுமமையும்: "தாருடைத் தனிமல நுலகின் முதையும்." கம்ப. பிணிவீட்டு. கஎ.

241. மூ. படைபோன: "விடைபோ மனங்கன்போல் வேல்விழிகடாமும், படைபோய் வருவனபோல்." விக்கிரம. உலா.

243. மூ. ஆடுகின்ற கொடி மாட முன்றில்: "தேவர் புகுதருஉஞ் செழுங்கொடிவாயிலும்" (மணி. க: சo), "கூடஞ்சூழ் மண்டபமுங் குலாயவாசற் கொடித்தோன்று, மாடஞ்சூழ் கோயிலே" (திருஞா. தே.), "பூங்கொடி வாயி லண்ண." பெரிய. மனுநீதி. உக.

## அ. காளிக்குக் கூளி கூறியது.

இதில், தக்கயாக சங்காரம் கூறப்படுகின்றது.

245. மூ. 'அது' என்றது படைபோன பேயை.

உரை. 'இது' என்றது ஒரு பக்கத்தை.

246. மூ. தக்கன் சிவபெருமானைப் புறக்கணித்து வேள்வி செய்யத் தொடங்குதல் இதனாற் கூறப்படுகின்றது.

* இங்கே கூடலென்றது காவிரிப்பூம்பட்டினத்தை.

இதற்கு - வேள்விக்கு.

உரை. சோழன் நரபதியென்னும் பெயருடையானென்பதை இந்நூல், 9 - ஆம்தாழிசைக் குறிப்பாலுணரலாகும்; "குடைநர பதியிவன் மரபு", "அருளு நரபதி முதல்வ பணிமணி முத்தமே" என்பன குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்.

247. மூ. இதில், தக்கன் கனகலத்தில் யாகசாலை சமைத்துத் தேவர்களை அழைத்தது கூறப்படுகிறது.

உரை. ஆராமம் - சோலை: "இவற்கு முகிலூர்தி, அந்தப் புரத்திலாராம மந்தப் புரத்திற் காராமம்." வி. பா. திரௌபதிமாலையிட்ட. சக.

248. மூ. இதில், அசுரர்களும் யாகத்திற்குப்புறப்பட்டமை கூறப்படுகின்றது.

பயணம்: "பரிவேட்டை யாடுதற்குப் பயணமென்றே", "விட்டவதி கைப்பதியி னின்றுபய ணம்பயணம் விட்டு" (கலிங்க. உசரு, உ௮எ); "நன்னாட் கொண்டு பெரும்பயண மெழுக வென்று நலஞ்சாற்ற", "கழறிற்றறிவார் தாமும் பயணமுடன்" (பெரிய. சேரமான். சசு, கஉக); "பயணம் புறப்படு வித்து." செ. வெள்ளானை. க௮.

249. இது முதல், 253 - ஆம் தாழிசைமுடியத் திக்குப் பாலகர், துவாதசாதித்தர், ஏகாதசருத்திரர், அசுவினிதேவர்கள், மருத்துக்கள், விசுவதேவர்கள், அட்டவசுக்கள், சுக்கிரபிரகஸ்பதிகள் முதலியவர்களும், ஏனையோர்களும் தக்கன் யாகத்திற்கு வருகை கூறப்படும்.

மூ. புரந்தரனென்றது மகேந்திரனை. உலோக பாலர்களுக்குத் திக்கயங்களே வாகனமென்பது, "திசைக்களி றூர்தித் திக்கிற் காவல ரெண்மர்" (கம்ப.) என்பதனாலறியப்படும்.

உரை. பாவகாரி: "நோய் செய்த பாவ காரியிற் பிறந்த பாவியேன்." கம்ப. கிளைகண்டு. கக.

251. மூ. ஏகாதச ருத்திரர்களுக்கு எருதுகள் வாகனமென்பதை இந்நூல் 461, 580 - ஆம்தாழிசைகளாலும் அறியலாகும்.

252. மூ. ஆவுதி - ஆகுதி; "புக்கா வுதிகள் பலவேற்றும்" (தக்க. 46) என்பதன் குறிப்பைப் பார்க்க.

உரை. கோயிலார் - இந்திரன் அரண்மனையிலுள்ளவர்கள்.

254. இதுமுதல் 259 - ஆம் தாழிசை ஈருக இந்திரன் வருகை கூறப்படும்.

மூ. வச்ரமாலை: "நகைசெய் வச்சிர நாயக மாலையும்" (தக்க. 280.) யாதும் - சிறிதும்.

257. மூ. மீது போகதியும் பதாகையும் வேறுபட்டில: "வெண் கொடி யாடுமால்.........கங்கையு மென்னவே" (தக்க. 634); "வாடை தொறு மாடுகொடி மாகநதி மானும்", "துறைகொள் கங்கையின் பெருக் கமோ.........மாடமேற் செழுமணிக் கொடியீட்டம்" (திருக்குற். திரு நாட்டுச். ௩௬; திருநகரச். ௧.) பதாகை - பெருங்கொடி யென்பாருமுளர்.

259. மூ. அலம் கையில் படை உடைய.

260. உரை. இருக்கச் செய்தே: 'சொல்லச் செய்தே' (தக்க. 391 - உரை) என்றதைப்போன்ற ஒரு தொடர்மொழி. அஞ்சவிமானம்: "அன்னத்தேரயன்" (திருஞா. தே.), "அன்னத்தேரின னயன்வலப் பாங்க ரும்." திருவிளை. திருமணப். ௧௧௩.

261. இது முதல் 286 - ஆம் தாழிசை வரையில் திருமாலின் வரவு கூறப்படும்.

மூ. பயணம்: 248 - ஆம் தாழிசை அடிக்குறிப்பு, குறிப்புரை முதலிய வற்றைப் பார்க்க.

262. இது முதல் 267 - ஆம்தாழிசைமுடியத் திருமாலொடு வந்த குதிரைகளின் சிறப்புக்கள் கூறப்படும்.

இத்தாழிசையிற் பச்சைக்குதிரைகள் கூறப்படுகின்றன.

263. இதிற் கூறப்படுவன கற்கிகள்.

264. இதிற் கரிய குதிரைகள் கூறப்படுகின்றன.

மூ. கரியவனைப்பின: "கறுப்பிலழகனடி." திருக்குற்றாலக்குறவஞ்சி.

265. இதிற் கூறப்படுவன வெண் குதிரைகள்.

மூ. தரங்க நிரைத்தன: "ஒலியவார் திரையி னன்ன வொழுங்கின யோக மாக்கள்" (திருவிளை. திருமணப். ௧௧.) எனைப்பல: "எனைப்பல வுமே." தக்க. 729.

266. இத்தாழிசையிற் சிவப்புக்குதிரைகள் கூறப்படுகின்றன.

மூ. செக்கர் விசும்பு வெளுக்கச் செய்யன: இது, "மதிகரு கக்காயு நிலாவின" (தக்க. 270) என்பது போன்றது. செக்கர் விசும்பு: அன் மொழித்தொகை.

267. மூ. பாம்புகள் கயிறுக விசிக்கப்படுதல் இந்நூல் 382, 411 - ஆம் தாழிசைகளிலும் கூறப்படுகின்றது.

268. இது முதல் மூன்று தாழிசைகளால் திருமாலொடு வந்த தேர் களின் பெருமை கூறப்படும்.

மூ. குன்முதிர் மழையைக்கீள்வன: "கார்வயி றுடைக்குங் கூம்பு டைத் தடந்தேர்." கூர்ம.

269 உரை. பிதாத்தானத்தாலென்றது, இத்தேரினையூரும் விஷ்ணுவை நினைத்து.

271. இதுமுதல் நான்கு தாழிசைகளால் திருமாலுடன் வந்த யானைகளின் பெருமை கூறப்படும்.

மூ. என்றும் மாதிரம்.

உரை. ரட்சாமூர்த்தி - திருமால்.

272. மூ. விலங்கலேழிற்றடம் : "முதற் கிரிகளேழினுமரு நளினி" என்பர் பின் ; தக்க. 397.

273. மூ. மழவிற்பாற்கடல் மாந்தி வளர்ந்தன : "குழவி பால்குடிப் பதுகடல் குடிப்பது" (பிரபு. கைலாய.) 'மதத்திலக்கடற் பான்முடை மாற்றின' என்றதனால், மதம் மணமுடையதென்பது பெறப்படும்; தக்க. 3 - ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க. மூக்கு - துதிக்கை ; "மாதிரக் களிற்றின் வரிக்கைவாண் மூக்கிடை மடுப்ப." கம்ப. நிந்தனை. உ.

274. மூ. உருத்தனித்தனி பாற்கடலொப்பன : தக்க. 259.

275. உரை. சோழன் நரபதியென்பதை, 9, 246 - ஆம் தாழிசைகளின் குறிப்பாலும் உணரலாகும்.

276. இதுமுதல் 282 - ஆம் தாழிசை முடியத் திருமால் ஆடையையும் அணிகளையும் புனைந்து வருதல் கூறப்படும்.

மூ. பீதகவாடை - பொன்னுடை.

277. மூ. மத்தம்: "மத்தம் புல்லிய கயிற்றின்" (சீவக. சஉ௩). பாற்கடல் சேப்பவந்தகவுத்துவம் : "கொட்குங், கடல்சேப்ப வந்த கவுத்துவம்" குலோத். உலா. உ௩௬.

279. மூ. காலை சூழ் செங்கதிர் முதலாயின : "பகற்செய்யுஞ் செஞ்ஞாயிறும், இரவுச் செய்யும் வெண்டிங்களும்" (மதுரைக். எ - அ) ; சூரியனுக்குத் திவாகரனென்னும் பெயருண்மையும் இங்கே அறியற்பாலது. கமலக்காடன்ன கண்ணன் : "கருமுகி லுமைக் காடு பூத்து" (கம்ப.); "கரிய மால் வரைமுளரிக் காடென்று கிடந்தாங்கு." திருவரங்கக். க.

280. மூ. நதிக்குப் போத வொழுகுமுத் தாரம் : தக்க. 106 - குறிப்பைப் பார்க்க.

281. மூ. அந்திச்சேயொளி : "அந்திப்போதனையான்" என்பர் பின் ; தக்க. 315. அந்திச்சேயொளியென்றது சிவபெருமானை.

282. மூ. புறத்தும் : உம்மை இறந்தது தழீஇயது.

உரை. புண்டரீகமென்றசொல் வெண்டாமரைக்கு ஆதல், "புண்டரீகத்தனி முதற்கும்" (கம்ப. கிளைகண்டு. எஎ) என்பதனாலும் அறியப்

படும். ஆதிசேடன் வெண்ணிறமுடையவனென்பது 154 - ஆம் தாழிசையாலும் உணரப்படும்.

284. மூ. கவரிக்குப் பாற்கடற்றிரை உவமை : "பாலின் வெண்பரவைத்திரை.........பரந்தெனச் சாமரை பதைப்ப." கம்ப. நிந்தனை. கசு.

உரை. அமிர்து கடைந்தது லவண சமுத்திரத்தென வுணர்க: 'பாலசந்திரன் பிறந்தது லவண சமுத்திரத்தென வுணர்க' (தக்க. 633 - உரை) என்பது இங்கே அறிதற்பாலது ; "பொங்குமா கருங்கடனஞ்சுண்டான்", "அப்புறுத்த கடனஞ்ச முண்டான் றன்னை" (தீருநா. தே.), "காநீர் கடலில் விடமுண்டு" (சுந்தா. தே.) என்பவற்றால் அமுதமும் கருங்கடலிற் பிறந்ததென்பது உய்த்துணரப்படும் ; "உவரி வாயன்றிப் பாற்கட லூதவிய வமுதே", "தாழி தரையாகத் தண்டயிர் நீராக......... ஆழி கடைந்தமுத மெங்களுக்கே யீந்தாய்." கம்ப. சித்திரகூடப். ரு, சரபங்கர். உக.

286. மூ. ஈருரு - புருடவடிவமும் பறவை வடிவமும்.

உரை. மகாமேருவுக்கு ஒப்பு கருடபகவான் : "செம்பொற் குன்றின்மேல், வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினான்." கம்ப. திருவவதாரப். கரு.

287. இதுமுதல் 294 - ஆம் தாழிசைகாறும் தன்தந்தை வேள்வி செய்வதையறிந்த உமாதேவியார் சிவபெருமானிடம் விடைபெற்று யாகசாலைக்குச் செல்வது கூறப்படும்.

288. மூ. யானும் கொள்ள விடை தந்தருளுக என இயைக்க.

290. மூ. ஐயன் 'என்கொல்'எனப் பெயர்த்து 'அருளுக' என்றனள் என்க. பெயர்த்தும் - பின்னும் ; தண்டி. சூ. கூ௦.

291. மூ. குறுமுறுவல் - புன்னகை.

உரை. வேணும் : வேண்டுமென்பதன்மரூஉ ; "வேணுமாகில்வேணுமன்றி." வி. பா. சூது போர். கசுரு.

292. உரை. தோற்றப்பட்ட ரூபமெல்லாம் பரமேசுவரி வடிவு : தக்க. 116 - ஆம் தாழிசையின் குறிப்பைப் பார்க்க ; 'யாவையுமாம் ஏகம் - பராசத்தி' (தீருச்சிற். எக - உரை) என்பதும் இங்கே அறியத்தக்கது.

293. மூ. ஏதிலர் - அயலார்.

294. மூ. உலகினன்னை : "அகிலலோக மாதாவே." தக்க. 103.

உரை. வச்சலப்பிராட்டி - தக்கனுடைய மனைவி.

295. இது முதல் 304 - ஆம் தாழிசை முடியக் கோபத்தால் தேவி கூறுவன கூறப்படும்.

297. உரை. ஒருதலை - துணிவு.

298. மூ. ஏனென்கிலீர்: "ஒருவா ரணமழைப்ப நீயோவந் தேனென்றய்" (கம்ப. விராதன். சக), "ஏனென்று கேட்பவ ரில்லாத் தமிழை." தனிப்.

300. மூ. தந்தையார் தாயார் தலைவருக்கு: "எந்தையா யெம்பிரான் மற்று மியாவர்க்குந், தந்தைதாய் தம்பிரான் றனக்கஃதிலான்" "தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடீ." திருவா. திருச்சாழல், ந.

301. உரை. மாயா சக்தியான எனக்கு: 168 - ஆம் தாழிசையின் குறிப்பைப் பார்க்க. முதலிகள் - முதல்வர்கள்; தலைவர்கள்; 'திருவிற்குக் காவலான முதலியே' (தக்க. 180 - உரை) என்பதன் குறிப்பைப் பார்க்க.

302. மூ. யஞ்ஞா: "செய்த வேள்விவா யஞ்ஞர் தஞ்சிரம்." தக்க. 344.

303. உரை. பிறந்தவழிக்கூறல்: தொல். வேற்றுமைமயங்கு. சூ. நக.

304. மூ. தீக்குப்பிறந்த இல்லென்னும் வேய்: "வான்றொடர் மூங்கி றந்த வயங்குவெந் தீயி தென்னத், தான்றொடர் குலத்தை யெல்லாந் தொலைக்குமா சமைந்து நின்றாள்", "அமைத்தரு கனலென" (கம்ப. கரன்வதை. கக, திருவடி. சo), "மூங்கிலிற் பிறந்து முழங்குதீ மூங்கின் முதலற முருக்கு மாபோல." உத்தராராமாயணம், இலவணன்வதை. உக.

உரை. இவ்யாகத்துக்கு யானும் நெருப்பு: "மாய் குடிக்கு நிமித்த மாக மகட்பெறும்" என்பர்பின்; தக்க. 768.

308. இதுமுதல் 321-ஆம் தாழிசை முடியப் பதினெண்கண்ணத்து மடவாரும் கைலைமலையில் இருந்த காட்சிகளின் சிறப்பையுணர்த்தித் தேவியின் முனிவை யாற்றுதல் கூறப்படும்.

மூ. பச்சை விளக்கே: தக்க. 166-ஆம் தாழிசையின் குறிப்புக்களைப் பார்க்க.

309. மூ. திருமலை: "திருமலை வலஞ்செய் திறைஞ்சியே" (தக்க. 336), "நீரூர்தரு நிமலன்றிரு மலையார்க்கய லருகே, தேரூர்தரு மாக்கன்." தே. திருச்சுழியல்.

உரை. மானசகோட்டகம்: கோட்டகம் - குளம்; "படைநெடுங் கண்ணற், குவளைக் கோட்டகங் கடுத்தது" (கம்ப. ஊர்தேடு. நந), "கோட்டகக் கமல நாப்பட் கொட்டிபூத் தலர்வ தாமால்." திருத்துற். அவை. கஉ.

310. உரை. உகாந்தப்........மாயச்சேல்: "பலகடலுஞ் செதிளடங்கப் பசுந்துழாய் பரிமளிக்கப், பலகடமீன் வடிவெடுத்தாய்." அழகர்கலம், க.

312. மூ. தெய்வீகவாவியாதலின், 'அலரோடளி தோயாதன' என்றார்.

313. உரை. பரப்பு, நெடுமை யென்றது நிழலின் தன்மைகளை.

314. மூ. நானாவிதம் - பலவிதம்; "நானாவித நினைவார்தமை நலியார்நமன் றமரே" (தே. திருச்சுழியல்); "நானே நானாவித நரகம்புகும் பாவஞ் செய்தேன்" (பெரியதிரு. க. க: உ); "நானாவிதமா நளிமாதிர வீதியோட." கம்ப. நகர. எo.

315. மூ. அந்திப் போதனையான்: "அந்திச்சேயொளி." தக்க. 281.

317. மூ. இதனால், தேவி திருக்கண்களின் அழகு சொல்லப்படுகிறது.

விழிகளின் கறுப்பாற் செங்குவளைகள் கருங்குவளைகளாயினவென்பது கருத்து.

வலிபட்டன - மாறுபட்டுத் தோன்றின; 'மறுதலைப்பட்டமை கருதி வலிமுகமென்னப் பட்டதுபோல' (நன். சூ. உஎஉ - சங். உரை) என்பது இங்கே அறியற்பாலது.

318. மூ. இதில், தேவியின் திருவாய் மலர்ச்செவ்வி கூறப்படுகின்றது.

முன்பு வெள்ளாம்பல்களாக இருந்தவை திருவாயின் சிவந்தஒளிபடச் செங்குமுதங்களாயின.

319. மூ. முன்பு வெண்டாமரை மலராக இருந்த இவை நின்பாத ஒளியால் செந்தாமரையாயினவென்பது பொருள்.

317 - 9. இம்மூன்று தாழிசைகளின் கருத்துக்களோடும், "நீணிறத் தாற் சோலை நிறம்பெயா நீடியதன், ஞணிறத்தாற் பொய்கைத் தலஞ் சிவப்ப" (நள. சுயம்வர.) என்பது ஒப்புநோக்கற்பாலது.

320. மூ. இதுகொண்டு.........தெளிப்பார்: சுமங்கலிகள் கூந்தலை எப்பொழுதும் நீரில் நனைப்பதில்லை யென்பதும், ஸௌபாக்கியவதி யென்னுந் தெய்வம் அதில் தங்குகின்றதென்பதும், தீர்த்தத்தைக் கூந்தலில் தெளித்துக்கொள்ளல் மரபென்பதும் பெரியோர் கொள்கை; "கோதையர் குஞ்சியுட் புகத், தெளிக்குந் தீர்த்த மருத்திரு வாரூர்" (திருநா. தே.); பெருங்கதை, க. சஉ: கஉஅ-ம் அடியின் குறிப்புரையைப் பார்க்க.

321. மூ. மழுவார் - சிவபெருமான்.

322. மூ. ஒன்றுந்தணிவின்றி - சிறிதும் கோபம் தணியாமல். கோநகர் - திருக்கோயில்; நகரென்பதற்குக் கோயிலென்னும் பொருளுண்மை, 92-ஆம் தாழிசையாலும் உணரப்படும்.

323. உரை. திருப்பாட்டு - தேவாரம்; நச்சினார்க்கினியரும் தேவாரத்தைத் திருப்பாட்டென்றே வழங்குவர்.

324. மூ. திருவுள்ளமெடுத்திலன் - எண்ணங்கொண்டிலன்.

325. மூ. 'முயலகன்பெருவெரிந்மிசைக் காலெடுத்திலர்' என்றது, சிவபெருமான் முனிந்து இப்பொழுதே பிரளயகாலத்தை உண்டாக்கவில்லையென்று குறிப்பித்தபடி.

327. மூ. நின்ற பாகம்: "கூடியதன் னிடத்தா னுமையா னிடத்தான்." பொன்வண்ணத். சுo.

இத்தாழிசையுடன், "ஆகத்தி லேயொரு பாதியென் னம்மைக் களித்தவடன், பாகத்தி லேயொன்று கொண்டா யவண்மற்றைப் பாதியுமுன், றேகத்திற் பாதியுஞ் சேர்ந்தா லிருவருண் டேசிவனே, ஏகத் திராம விருப்பாய் களந்தையு மென்னெஞ்சமே" (களந்தை இரட்டைமணிமாலை) என்பது ஒப்புநோக்கி ஆராயற்பாலது.

உரை. தகுதிமொழி: தொல். கிளவி. சூ. கஎ.

328. மூ. மெய்ப்படப் பட்டபாகம் இரண்டும் வேறு கண்டிலரெனக் கூட்டுக.

329. மூ. இந்தன அடவி. சந்தன அடவி. இருண்ட தண்சந்தனுடவி எரிந்ததொத்ததென்க. சாரல் வேறுபட்டதென முடிக்க.

330. மூ. 'பண்டையுண்டி' என்பதனுடன், "ஆலமொன்றுமமுதென்று பண்டமுது செய்யுமையர்" (தக்க. 650) என்பது ஒப்புநோக்கத்தக்கது. ஆடு மஞ்சனம்: சிவபெருமான் ஊழியிறுதியில் வடவாமுகாக்கினியே மஞ்சனமாக ஆடுவாரென்பது, "ஆடுமஞ்சன முங்கொதித்தது", "மேருவில்லி மஞ்சனச் சாலைவாய் வெதுப்பி", "அடிப்பெருங்கடவு ளூழியீறுதொறு மாடு மஞ்சனம்", "ஊழித் தீயுவந் தாடுவ தோர்ந்ததோ" (தக்க. 332, 379, 656, 673) என்பவற்றாலும் அவற்றின் உரைகளாலும் அறியப்படும்.

இதன் கருத்து, அடங்கியிருந்த பாம்பு முதலியவைகளும் கோபிக்கத் தொடங்கின வென்றபடி; பின்னுள்ளவற்றையும் இவ்வாறே கொள்க.

332. உரை. சந்திரனையும் கண்ணியாகக் கூறுதல் மரபு; "உச்சியிற் பனி வீசுகண்ணி" (தக்க. 625) என்பதன் குறிப்பைப் பார்க்க; 'பசுங்கதிர்க் குழவித்திங்களைக் குறுங்கண்ணியாகவுடைய அழலவிர் சோதி யருமறைக் கடவுள்' (இறை. க-உரை), "கங்கைசூழ் சடையிற் கதிரிளம் பிறை நறுங்கண்ணியையர்", "வளரிளந் திங்கட் கண்ணி மன்றுளார்", "கதிரிளம்பிறைக் கண்ணியர்", "புடைமாலை மதிக்கண்ணிப் புரிசடையார்", "கலையிளந் திங்கட் கண்ணிக் கண்ணுதல்." பெரிய.

334. உரை. இது யோகாப்பியாசத்தால் வந்த திருநயனம்: "முக்கண்ணென்றது......ஒன்று யோகத்தைப்பற்றி..........மேனோக்கியும்." தக்க. 454 - உரை.

335. மூ. 'பணியாமல் வந்தன கூளியே' என்பதும், "கூறுமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி" (தக்க. 334-மேற்.) என்ற கலித்தோகையடிகளுக்கு இவ்வுரையாசிரியர் கொண்ட பொருளும் ஒத்திருத்தல் காண்க.

337. மூ. மூ.="ஈறில் காலமு ஞால முங்கொடு செய்த தேர்மிசை யேறியே" (தக்க. 626.) வைதிகத்தேர்: "வைதிகத்தேர் நின்றார்", "வைதிகத் தேரின் மேருத், திண்சிலை குனிய நின்றார்." பெரிய. விறன் மிண்ட. ௬; குங்குலியக். ௩௦.

338. உரை. ஆதபத்திரம் - குடை; 257 - ஆம் தாழிசையைப் பார்க்க.

340. மூ. கொள்ளை - மிகுதி; "கழுநீர்க் கொள்ளை." கம்ப.

உரை. லிங்கபுராணம் - சிவபெருமான் பெருந்தேவிருவரும் அடிமுடிதேட இலிங்கவடிவமாய் நின்ற பழங்கதை; இதனை 'இலிங்கபுராணக் குறுந்தொகை' என்பதாம் அறிவிக்கும்.

341. மூ. சன்னவீரம் - மார்பில் அணியப்படும் ஓர் அணி; "சன்ன வீரந் திருமார்பில் வில்லிலக" (ஆதி. ௧௮ - ௧); "சன்ன வீரமிடை மின்னுதட மார்பினொடும்", "சன்னவீரத்த கோவை......பொலிய" (கம்ப. விராதன். ௧௨, நிந்தனை. ௮); "கொண்டக்கொடு பன்மணி கோத்திடை யேனக்கோடு, துண்டப்பிறை போல்வன தூங்கிட வேங்கை வன்றோற், றண்டைச் செயல் பொங்கிய சன்னவீ ரந்தயங்க." பெரிய. கண்ணப்ப. ௫௧.

345. உரை. சூரிய சதகம்: சூரியனுடைய தோத்திரமாக அமைந்த ஒரு வடமொழி நூல்; மயூரசதகமென்றும் கூறப்படும். 7-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஸ்ரீ ஹர்ஷனுடைய அரசவையிற் புலவராக இருந்தவரும் பாணபட்டருடைய மாமனுமாகிய மயூரகவி யென்பவரால், தாம் இழந்த கண்களைப் பெறும்பொருட்டுப் பாடப் பெற்றதென்பர்.

346. 337-ஆம் தாழிசைமுதல் இதுவரையிற் கூறப்பட்டவை சிவபெருமானுடைய செயல்கள். வீரபத்திரர் சிவபெருமானுடைய கூறாதலின் சிவபெருமானுடைய செயல்களெல்லாம் அவருடையனவாகக் கூறப்பட்டன.

347. மூ. விழி கொளுத்த வானின்வில் அடைய அற்றவென்க. 'நாண்விழி கொளுத்த' என்றமையால், நாணாகிய பாம்பு நச்சுவிழியராதல் அறியப்படும்.

உரை. இதனால் பினாகத்தின் நாணும் தட்சகனென்னும் பாம்பென்று விளங்குகிறது.

348. இது முதல், பூதகணங்களின் செயல்கள் கூறப்படும்.

351. மூ. எழுவர் குமரிமார்: "தெய்வமகளி ரெழுவரும்." தக்க. 168.

352. உரை. லோகாக்கிரம் - உலகங்களின் உச்சி.

353. மூ. இடி: தண்டி. சூ. ருச-மேற். 'பண்டுபுர.'

354. மூ. அகலிடந்தொழுந்துவாதசாதித்தர்: "பலர்தொழத் தோன்றி, யேமுறவிளங்கிய சுடர்." (நற். உஅ௩); முருகு. உ-அடிக்குறிப் பைப்பார்க்க.

355. மூ. கீழ் வீழுமுன் பிடித்து இடி விழுங்கியே: "வானவேறு செவ்வியோடு கவ்வியே." தக்க. 383.

356. உரை. இரண்டு தொழில் - தேடுதலும் யாகசாலைக்கு ஓடுதலும்.

357. மூ. வந்து உகாந்தம் கடல் எனப்பிரிக்க. சந்திரனுடைய நிலவினால் சந்திரகாந்தம் உருகுமென்பது இங்கே அறியற்பாலது.

உரை. 'சந்திரனைகண்' என்றதனால், இச்செயலைச்செய்தவை சாரூபம் பெற்ற பூதங்களென்பது அறியப்படும்.

358. மூ. முக்கி - விழுங்கி: "மலைகள்வாரியன வேழு மூக்கி" (தக்க. 410); சகோரத்தை நிலாமுக்கியென்பர் (தக்க. 605-உரை); "பாசவன் முக்கித் தண்புனற் பாயும்" (புறநா. சுஅ); "முத்தைக், கொக்கு மூக்கிக் கக்கிவிக்குமச் சோலைக் குறுங்குடியே" (தனிப்.); "கங்க மூக்கின சிறு மீனெல்லாம்." திருவிளை. இந்திரன். ருசு.

359. மூ. கடவுணீலியூர்யாளி: "ஆளியேறி", "யாளி யூர்தி." தக்க. 613, 729.

360. உரை. 'அம்மலை மரமும்.........உறுப்புக்குறையும்' என்றது, தேனையுண்ட களிப்பினால் மரமுதலியவற்றை அழிப்பவென்று குறிப் பித்தபடி; கம்ப. திருவடிதொழுத படலத்தைப் பார்க்க.

362. மூ. நாகலோகத்தில் அமுதகுடங்களுண்டென்பதும், அவற் றைப் பூதகணங்கள் குடித்தனவென்பதும், "நாகர்தங்கள் திவ்யபானம் வைத்தபொற் சாலெடுத்து", "கலத்தமிர்தப் பரப்படையக் கவுட்புடை யிற் கவிழ்த்து" (தக்க. 387, 479) என்று பின்னும் கூறப்படும்; "வாசுகி தனக்கிவன் வரவு ணர்த்தலும், ஆசுகன் மதலையென் றறிந்து மற்றவன், தேசுறு பொற்குடந் தெரிந்து பத்தினு, லேசறு மமுதெலா மினிதி னூட் டினான்" (வி. பா. வாரணவத. கரு) என்பதனாலும் நாகலோகத்தில் அமுதகுடங்களுண்மை பெறப்படும்.

364. மூ. இத்தாழிசையுடன் 418-ஆம் தாழிசை ஒப்புநோக்கற்பாலது.

உரை. சரித்து - இயங்கி.

365. உரை. ஆகாசம் வயிறெனப்படும் விதூஷகதூஷணநாதர்: "மாகமேயனையர் தம்மகோதரமும்." தக்க. 421.

366. உரை. மலைக்குச் சமானர் அசுரர்: "நீல வரைநிரைகள் போலு மவுணர்." தக்க. 57.

367. மூ. சூலமுத்திரைஇடுகை - சைவராக்குகை; "மழுப்பொறித்தே" (தக்க. 487) என்பதற்கு, 'மழுவைப் பொறித்து மாகேசுவராக்குகை' என்றெழுதிய உரையும், "மின்னொரு மூவிலைச் சூலமென் மேற்பொறி" (திருநா. தே.) என்பதன் சம்பந்தமான திருநாவுக்கரசு நாயனார் சரித்திரமும் இங்கே அறியத்தக்கன.

368. இதுமுதல் 373-ஆம் தாழிசைமுடியப் பூதகணங்களின் ஆபரணங்கள் கூறப்படும்.

இதில், பூதகணங்கள் சட்டை கூறப்படுகின்றது.

369. மூ. தூற்று: "தூம்புடை நெடுங்கை வேழந் துற்றிய வெள்ளிலேபோல்" (சீவக. ௨௩௨.) சளம்பமீதலம்ப: "கஞ்சுகமலம்ப" (தக்க. 93); மலைநாட்டில், பனியுள்ள இடத்திற்குச் சளும்பு என்ற பெயர் வழங்குதலால், சளம்பச்சட்டையென்பதற்குப் பனிச்சட்டையென்று பொருள் கூறுதலும் பொருந்தும்.

370. மூ. சீயவேறு......பெய்த காது: "கோளரி யைக்கொடு தாழ்குழை யிட்டாள்." கம்ப. அயோமுகி. ௬௮.

371. மூ. குதம்பை - காதணி.

372. மூ. குஞ்சிவேர் பறித்தகுண்டர்: "தடுக்குடுத்துத் தலையைப் பறிப்பார்", "பறித்த புன்றலைக் குண்டிகைச் சமணரும்", "தலைபறித்த கையர்", "தலைபறி செய்து தவமுயல்பவர்", "முகரோம மயிர்கடிந்த செய்கை யாரும்", "குஞ்சியைப் பறித்துத், திரளைகையிலுண்பவரும்." திருஞா. தே.

உரை. குஞ்சி ஆண்மக்கள் தலைமயிரென்பது, "தீயெழக் கொளுந்தியன்ன குஞ்சி" (தக்க. 121) என்பதனாலும் அதன்உரையாலும் விளங்கும். இது கூந்தற்கும் சிறுபான்மை வழங்கப்படும். பொன்னெயில் வட்டம்: 760-ஆம் தாழிசையையும் அதன் உரையையும் பார்க்க.

376. உரை. முதுமக்கட்சாடி - மிக முதிர்ந்தவர்களை இட்டுவைக்கும் மிடா; "ஓடி மறலி யொளிப்ப முதுமக்கட், சாடி வகுத்த தராபதி

யும்" (விக்கிரம. உலா), "பதுமக் கடவுள் படைப்படையக் காத்த, முது மக்கட் சாடி முதலோன்" (குலோத். உலா), "சித்தமகிழ்ந் தின்பமுறச் செங்கோ னடத்தநம, னுத்தமனென் றந்நா ளுயிர்கொடுபோ காமை யினான், மொய்த்த முதியோர்க்கு முதுமக்கட் சாடிபல, வைத்தகுல தீப கனே மன்னுகோ மன்னேகோ." திருவெண்காட்டுப். சத்தியநல்விரத. க.

378. மூ. திரிதண்டுடையவராக ஒருவகைத்துறவியர் உண்டு; அவர் முக்கோற்பகவரெனவும் கூறப்படுவர்.

380. மூ. த்ரிவேதம்: "மும்மறை யாலும் வணங்கப் படுகின்ற முக்க ணக்கன்" (பொன்வண்ணத். அஎ); "சிறந்த வேதம் விளங்கப் பாடி" (மதுரை. சகூஅ) என்பதனுரையில், 'அதர்வம் தலையாயவோத்தன்மை பொருளிற் கூறினும்' என்பர் நச்சினார்க்கினியர்.

உரை. "காவி......மாதரான்": இம்மேற்கோள், சீந்தாமணியிற் காணப்படவில்லை. ஹலாயுதம் - ஒரு வடமொழி நிகண்டு.

381. உரை. வைசிரவணன் - குபேரன்.

384. உரை. சக்கரவாளத்திற்கு அப்பாலுள்ள சமுத்திரம் பெரும்புறக்கடலெனப்படும். பனைமீன்: "பனைமீன் வழங்கும் வளைமேய் பரப்பின்" (மதுரை. நஎடு), "ஒள்ளிய பனைமீன் றுஞ்சுந் திவலைய", "பனைமீன் றிமிலோடு தொடர்ந்து துள்ள." கம்ப. கடறுவு. உந, ௫௦.

385. உரை. உயிரை நீக்கி உடலைத் தின்றுமென்றவாறு.

387. மூ. நாகங்கள் அமுதகுடங்களை வாலால் வலித்திருக்குமென்று தெரிகிறது.

388. இதுமுதல், 396-ஆம் தாழிசைமுடியப் பூதகணங்கள் முறையே பெரும்புறக் கடல், பாற்கடல், தயிர்க்கடல், உப்புக்கடல், நெய்க்கடல், நன்னீர்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், கட்கடல் முதலியவற்றைக் குடித்து அழித்தமை கூறப்படும்.

உரை. அருமை: மகாதேவர் திருச்சடாபாரம்போல் அண்டகோளகைப்புறத்தும் நீர் அருகு இருத்தல் அடாதென்ற எண்ணம். மகாதேவர்......அருகது: "நீரற வறியாக் கரகத்து." புறநா. க: கஉ.

389. மூ. கண்ணிற் காய்ச்சிக் குடித்தன நாற்பாற் கடலுமே: "சுட்ட விழியிலெழு கடலும் வற்றி" என்பர் பின்; தக்க. 414.

391. உரை. சொல்லச் செய்தே - சொல்லும்பொழுது; இச்சொல் சொல்லச்சேயெனவும் வழங்கும்.

392. மூ. பொய்க்கடலென்றது புறச்சமயங்களின் மிகுதியை.

393. மூ. பூதகணங்கள் படிந்த அளவிலேயே தண்ணீர்ப்பரவை சேறாயின; எனவே குடிக்க வேறு நீரில்லை யென்றபடி.

உரை. மண்டை - வாயகன்ற ஒருவகைப் பாத்திரம்; "மண்டை கைப் பிடி பெரும்பேய்" (தக்க. 771), "கணங்கள் குருதி மண்டைசுமந் தாடவும்" (தகடூர்.), "ஏலாது கவிழ்ந்தவெனிரவன் மண்டை." புறநா. ௧௭௯.

394. உரை. நெட்டெழுத்தும்பர் ஒற்றுமிகத் தோன்றல்: தொல். உருபு. சூ. உ௪.

395. உரை. விடாய்த்து - விடாய்கொண்டு. மெய்தடித்தல் விசேஷம்: மற்றைக்கடல்கள் இவற்றிற்குப் போதியனவல்லவாயிருக்க, இக்கடல் இவற்றின் உடம்பைத் தடிக்கச்செய்யும் வன்மையுடையதாயிற்று; இஃது இதன் சிறப்பு என்றபடி.

397. மூ. முதற்கிரிகளேழினுமரு நளினி: 272-ஆம் தாழிசையைப் பார்க்க. மகோததி - சமுத்திரம். குறித்து - ஊதி.

உரை. உடைப்பெயர்ச்சொல் ஈறு திரிந்தது: தொல்.பெயர். சூ. ௧௧.

இத்தாழிசையிலும் வரும்தாழிசையிலும் இப்பூதகணங்களின் வன்மையைக்கண்டு பிரமா துயருறுதல் கூறப்படும்.

398. மூ. சமைய வந்து தகரத்தழுவினுந்தழுவும்: "தழுவிச் சமைத்தே" (தக்க. 483) என்பதும் அதனுரையும் இங்கே அறிதற்பாலன. சமைதல் - அழிதல்; "ஐவர் தலைவருஞ் சமைந்தார்." கம்ப. பஞ்சசேனா. ௬௭.

உரை. அவை இரும்பும் பொன்னுமெனவுணர்க: 'இந்திரலோகம் பசாசலோகமாகை பொன் இரும்பாகை' (தக்க. 565-உரை); 'இஃது இரும்பு பொன்னாகை' என்பர் பின்னும்; ஷை. 566-உரை.

400. மூ. சுடர் கிளைத்தனைய செய்ய சுரிபங்கி: "எரிதலை" (தக்க. 58) என்பதன் குறிப்பைப் பார்க்க.

பூதங்களின் தலைமயிர்க்குத் தழலும், விழிப்புகைக்கு ஊழித்தீயின் புகையும், கடலையும் அண்டத்தையும் அழித்தலுக்கு வடவாமுகாக்கினியின் செயலும் உவமை.

401. மூ. இத்தாழிசையுடன் 432-ஆம் தாழிசை ஒப்புநோக்கற்பாலது.

உரை. ஆயுதவனம்: "வாளின்வனம் வேலின்வனம் வார்சிலை வனந்திண், டோளின்வனம்" (கம்ப. கரன்வதை. ௧௩௩.) கர்ப்பக்கிரகம் - கருப்பை.

402. மூ. அவர்கட்கரியாரா மெங்களையகர்: "இருவரோதெரிய வரியர்." தக்க. 423.

405. உரை. ஒருபூதமும்......எல்லாமாகவல்லன: "ஒருவரேயகில லோகமும்புதைய வேறுவேறுடம் புடையரோ" (தக்க. 423.) அழிந்தன வென்றது இதுகாறுங் கூறப்பட்ட மலை கடல் முதலியவற்றை.

406. மூ. தனையும் : தனை, அளவென்றபொருளில் வந்தது ; அத்தனை இத்தனையென்பனபோல ; "தினைத்தனைப்பொழு தும்மறந் துய்வனோ" (திருநா. தே.) சாதம் - பிறப்பு.

உரை. அட்டம் : "அட்டமே பாயநின் றாடுமெங்களப்பன்" (காரைக். திருவாலங்காட்டுமூத்த. ௬), "அஞ்சுவித் தடர்க்குநாய்க ளட்டமாக விட்டு." பெரிய. கண்ணப்ப. எ௬.

408. மூ. வானுமின்றி......முதல்வன் : "வான்கெட்டு மாருத மாய்ந்தழ னீர்கெடினுந், தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையன்" (திருவா.) படைக்கு உவமையாக மகாதேவர் 425-ஆம் தாழிசையிலும் கூறப்படுகிறார் ; "ஈசன் மேனியை யீரைந்து திசைகளை யீண்டிவ், வாசில் சேனையை......யாவரே முடிவெண்ண வல்லார்." கம்ப. தானைகாண். ௩௫.

உரை. அவிகாரி - விகாரமில்லாதவர். பிரமாணப்பிரமேய ரகிதம் - பிரமாணமும் பிரமேயமும் அற்றது. ஏகம் - ஒன்று. சத் - என்றும் நிலைத்துள்ளது. சிச்சுரூபம் = சித் ஸ்வரூபம்- அறிவு வடிவு. சிவம் - மங்களம் பொருந்தியது ; இன்பவடிவு.

409. உரை. சலாங்கிசங்கள் - நீர்நிலை வகைகள்.

410. மூ. முக்கி - உண்டு ; 358-ஆம் தாழிசைக் குறிப்பைப்பார்க்க ; இது மொக்கியெனவும் வழங்கும் ; "சர்க்கரை மொக்கியகை." கந்தரலங்.

உரை. 'ஐயைகழல் பாடியே' என்றது கொண்டு, 'இவை பரமேசுவரி.........பேய்களெனவுணர்க' என்றார். சங்கிருதம் - ஸம்ஸ்கிருதம் ; 'சங்கிருத சத்தம்' என்றார் முன்னும்; தக்க. 82 - உரை. மாகதம் - வடமொழிச்சிதைவுகளுள் ஒன்று.

411. உரை. ஒப்பனை - அலங்காரம். கட்டியொப்பித்தல் - தழுவிக் கைகளை அலங்கரித்தல்; தழுவுகையே கைக்கு அணியென்று கொள்க ; "சக்கரக்கிரியு மெக்கிரியு மெப்புடவியுஞ், சமைய வந்துதக ரத்தழுவி னுந் தழுவும்" (தக்க. 398) என்றதும் இக்கருத்தை வலியுறுத்தும்.

413. மூ. இதனால், பூதகணங்களின் பாதவன்மையும் கைகளின்நீளமும் வலிமையும் விளங்குகின்றன.

414. உரை. பொன்றக்கெடுதல் - முற்றும் அழிதல்.

415. மூ. பொருபொரியும் : ஒலிக்குறிப்பு. கண்களால் மலைகள் பொரிந்தன. மலைகளைக் கண்களாற் பொரித்தல், 542, 584-ஆம்தாழிசைகளிலும் கூறப்படுகின்றது.

420. மூ. அயில் திரண்டனைய.

421. மூ. மேய்மேகம்: "கருவி மாமழை.........பருவ வெண்டிரை மேய்ந்து." நைடதம், நாட்டுப். க.

423. உரை. அவரை அன்புடையவரெல்லாருமறிவர்: "பத்தி வலையிற் படுவோன் காண்க" (திருவா.); "ஆரேனு மன்புசெயி னங்கே தலைப்படுங்கா, ணாரேனுங் காணா வரன்." திருக்களிற்றுப்படியார், கடு.

424. மூ. வளாகம் - பரப்பு; "தெண்கடல் வளாகம்." புறநா. கஅசு.

425. மூ. இறைவர்.........அடங்குமாறு: "எவ்வுயிரு நீங்கா துறையு மிறைசிவனென், றெவ்வுயிர்க்கு மன்பா யிரு." சைவசமயநெறி, பொது. உகரு.

426. உரை. ஸ்ரீபாதங்கள்...........தெய்வசாதி: தேவர்களு டைய கால்கள் நிலத்திற் படியாவென்பது இங்கே அறியத்தக்கது.

427. உரை. கனகலம் தக்கன் யாகம்பண்ணுகிற இடமென்பது 247-ஆம் தாழிசையிற் கூறப்பட்டது.

428. மூ. உம்பர்நீர் - பெரும்புறக் கடல்.

வீரபத்திரர் படையும் பத்திரகாளியின் படையும் கலந்து சென்றமை உகாந்தகாலத்திற் கடல்கள் பெரும்புறக்கடலுடன் கலந்து பெருகுவதை யொத்தது.

429. இதுமுதல் 433 - ஆம் தாழிசைமுடியப் பத்திரகாளியின் கணங்களின் தன்மை கூறப்படும்.

மூ. பைரவர்களுடைய தன்மைகளைக் காடுபாடியதிற் கண்டுகொள்க.

430. மூ. சாகினிகள்: தக்க. 89, 433.

431. மூ. த்ரிபுர பயிரவி: திரிபுராவென்பதும் பைரவியென்பதும் தேவியின் திருநாமங்கள்.

432. தேவியின் படைகளுக்கு எந்த வடிவத்தையும் எடுத்துக் கொள்ளும் ஆற்றல் உண்டென்பது இதனால் அறியப்படுகின்றது. இத னுடன் 401-ஆம் தாழிசையையும் அதன் உரையையும் ஒப்பு நோக்குக.

உரை. புமான்கள் - ஆண்பாலார்.

433. மூ. டாகினிகள்: விசுத்திசக்கரத்தில் பதினாறு இதழ்களை யுடைய தாமரையிற் செந்நிறமும் மூன்றுகண்களும் கதாயுதமும் வாளும் சூலமும் பெரியதோலும் ஒருமுகமும் பயங்கரஉருவமும் உடையவளாக வும், பாயசப்பிரியையாகவும், ஸ்பரிச தன்மாத்திரைக்கு அதிதேவதையாக வும், அமிர்தை முதலிய தேவதைகளாற் சூழப்பட்டவளாகவும், வீரர்க ளால் வணங்கப்படுகிறவளாகவும் தியானிக்கப்படுவாள் (லலிதா ஸஹஸ்ர நாமம், சஎரு - பாஸ்கரராயர் வியாக்கியானம்.) விசுவசாரதந்திர மென்ற

நூலொன்று, தேவியின் அம்சமான சண்டாளினியென்ற தேவதையின் தியானத்தைக் கூறுமிடையே, 'இடப்பக்கத்தில் டாகினியுள்ளாள்; அவள் யுகாந்தகாலத்துச் சூரியன்போல் விளங்குகிறாள்; அவளுடைய சடை மின்னலையொத்தது; அவள் முக்கண்ணினள்; வெள்ளிய வளைந்த பற்களையுடையவள்; காண்பாரஞ்சும் உருவினையுடையாள்; வாயினின்றும் நீண்டு தொங்கும் நாவினள்; தலைமாலையுடையாள்; இடக்கரத்திற் கபால மொன்றுடையாள்; தேவியின் கழுத்திலிருந்து பெருகும் இரத்ததாரை யொன்றைக்குடித்து நிற்பாள்' என்று டாகினியைப்பற்றியும் விளக்குகின்றது. சாக்தப்ரமோதமென்னும்நூல் டாகினியைத் தேவியின் தாமஸ குண அம்சமென்று தெரிவிக்கும். தந்திரசாரமென்ற வடமொழி நூலில், 'தேவிக்கு இடப்பக்கத்தில் இடத்தாளை முன் வைத்துக்கொண்டு ஒரு சக்தி யிருக்கிறாள்; அவள் கரியநிறத்தினள்; கைகளிற் கபாலமும் வாளும் உடையாள்; தேவியின் கழுத்திலிருந்துவரும் குருதிக்காலொன்றை மடுக்கிறாள்; அவள் தமோகுண வுருவினள்; அவள் பெயர் டாகினி. அவள் பிரளய காலத்தில் எல்லாஉலகத்தையும் அழிக்கவல்லவள்' என்று காணப்படுகிறது.

தேவியின் படைகளில், டாகினிவர்க்கமுமொன்றென்பது, "தம்மை நாடித் தலைவனை நாடுமே தலைவன் சீர்த்தி தலைபுனைந் தாடுமே, எம்மை யாள்கென் றிரந்திசை பாடுமே யிறைவி யைத்தொழும் டாகினிவர்க்கமே" (பாசவதைப். உ0எ) என்பதனாலும் பெறப்படும்.

யோகினிகள்: இவர்களைப்பற்றிய செய்திகளைக் காடுபாடியதிற் காணலாம். யோகினிகள் பன்னிருவரொன்றும் அவர்கள் முறையே, வித்யாயோகினி, இரேசிகை, மோசிகை, அமிர்தை, தீபிகை, ஞானை, ஆப்யாயனி, வியாபினி, மேதை, வியோமரூபை, சித்ரூபை, லக்ஷ்மி யோகினி எனப் படுவார்களென்றும் கூறுவர் ஒரு சாரார் (ஆனந்தலகரி, கஎ-லக்ஷ்மீதரர்); 'மகா சதுஷ்ஷஷ்டி கோடி யோகினீகண ஸேவிதா' (லலிதா ஸஹஸ்ர நாமம், உஙஎ) என்பதனால் தேவியைச்சூழ்ந்துள்ள யோகினிகணத்தார் சுசு - கோடியரென்று தெரிகிறது.

பதாகினிகள்: தக்க. 89.

உரை. சருவஞ்ஞகவி: இது குறிப்புச்சொல்; எம்முறையிலும் பாடும் வன்மையையுடையரென்றபடி; பெரியகவிகள் விதிகளையும் கடந்து இலக்கியம் அமைப்பார்கள்; "இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலின்" என்பதனால் அத்தகைய கவிகளுடைய இலக்கிய அமைதியே இலக்கணமாமென்பது பெறப்படும். கம்பர் முதலிய மகாகவிகளிடத்து இத்தகைய இயல்பைக் காணலாம்; "நாரா யணனை நாரயணனென் றேகம்ப, ஞோராமற் சொன்ன வுறுதியால்" என்ற காளமேகத்தின் பாட்டும் இதனை வலியுறுத்தும்.

434. பூ. ஐயன் - வீரபத்திர தேவர். மகராலயம் - கடல்; தக்க. 437.

படைக்குக் கடலும் வீரபத்திரருக்குச் சூரியனும் உவமை.

435. பூ. ஆவ: "ஆவவெந் தாயென் றவிதா விடும்" (திருவா.); "ஆவ வென்றின் றருளுதியேல்." ஆளுடையபிள்ளை. பூம். கூ.

உரை. ஸ்ரீ-செல்வம்; "பெறல ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்" (கம்ப.) என்பதும் இங்கே கருதத்தக்கது. பிரமாதம் - தவறு; அபாயம். பவிஷ்யம் - எதிர்காலம்.

436. பூ. பேதைமணந்தகௌரி - பேதையாகிய பரமசிவன் மணந்த பரமேசுவரி; இஃது இந்திரனது உட்கோள்.

அழையாமல் வந்தவளைத் தந்தை புறக்கணித்தான், நாமும் பிறரும் என்ன பிழைசெய்தோமென்பது கருத்து.

437. இதுமுதல், 447-ஆம் தாழிசைமுடிய இந்திரன் தன்படை வன்மையைச் சொல்வது கூறப்படும்.

இத்தாழிசையிற் கடலின்பெருமை கூறப்படுகின்றது.

முகடுசிந்தவும் பகடுசிந்தவும் முகில் பெய்யும் மகராலயங்களென இயைக்க.

438. வடவாமுகாக்கினியின் வன்மை இதிற் கூறப்படுகின்றது.

உரை. 'நக்கி' என்றதைக்கொண்டு, 'குடிக்கப் போதாது' என்றார்.

439. இதில் வாயுதேவன் பெருமை கூறப்படுகின்றது.

பூ. ஊழி அறையும் - ஊழியில் அறையும். பிதிர்க்கும் - பிதிர்ப்பான்; வினைமுற்று.

440. இதில் துவாதசாதித்தர்களின் பெருமை கூறப்படுகிறது.

பூ. மாயிரநேமி: "மாயிர நெடுவரை." கம்ப. பஞ்சசேன. ௩௬.

உரை. 'ஆயிரமாவது இங்கே பன்னீராயிரம்' என்றது, ஓர் ஆதித்தனுக்கு ஆயிரங்கிரணமாகப் பன்னிருவருக்கும் பன்னீராயிரமென்றபடி; "சூரியர்கள் பன்னிருவர் பன்னிரண் டாயிரஞ் சுடரொடுஞ் சூழ்வருவரே" (தக்க. 78) என்பது இங்கே உணரற்பாலது.

441. இதில், சந்திரனுடைய வன்மை சொல்லப்படுகின்றது.

442. நிருதியின்வீரம் இத்தாழிசையிற் கூறப்படுகின்றது.

பூ. கண்கடப்ப: கண் - இடம்.

443. இதில் ஏகாதசருத்திரர்களின் பெருமை கூறப்படுகின்றது.

444. இதில், காலன் யமன் என்பவர்களுடைய துணைவலி சொல்லப்படுகிறது.

மூ. பலகோடி முட்டைகளை ஒருதண்டத்தில் எற்றுவானென்னும் நயமுணர்க.

445. மூ.பதினெண்பதாதி: இந்தப் பதினெண்கணங்கள் வேறு; 447-ஆம் தாழிசையில், சிவபிரானுக்குக் கூறிய பதினெண் கணங்கள்வேறு.

உரை. தானவர் தனுவின் மக்களென்பர்; தக்க. 348 - உரை.

446. மூ. இளையோன் - உபேந்திரன். ரவிமுன் பனிவருமென்ன: "வீசுபனி, தானிற்கு மோவிக் கதிரவன் றோற்றத்திற் றார்மன்னனே." தனிப்.

447. மூ. ஒருதன்படைக்கென்றது மகாதேவர் படைக்கென்றவாறு.

உரை. மூச்சிற்காற்று: "உயிர்ப்ப வர்க்குரா மென்பதை யுள்ளியோ, செயிர்ப்பு மாருதம் பேர்ந்து திரிந்ததே." தக்க. 674.

448. இதுமுதல் 454-ஆம் தாழிசைமுடிய இந்திரன் மகாதேவர் தாழ்வையும் தன் ஏற்றத்தையும் சொல்வது கூறப்படும்.

மூ. கறடு - மிகச் சிறியகுன்று; வழக்கு.

உரை. கானென்பது கர்ணமென்பதன் சிதைவுபோலும்.

449. மூ. குல எண்பணி. அணிகொள்ளும்: முற்று. வெண்பணி: வெண்மையென்றது வெறுமையைக் குறிப்பதொரு பண்புப்பெயர்.

450. மூ. 'சுரும்பூத விழும்பேய்' என்பதனோடு "வண்டூத வம் மருங்கு ளேனென்று" (சீவக. ௧௭௦௦), "ஈக்காற்றுக் காற்ற விடை" (தனிப்.) என்பன ஒப்புநோக்கற்பாலன.

451. உரை. எங்கும்போய் இரந்துண்டு வைகும் இடம் அது: "ஐய முண்டுதரு மம்ப மாதியால்." தக்க. 646.

452. மூ. எண்கூறவனொருபேருரு: 141-ஆம் தாழிசையுரை முதலியவற்றைப் பார்க்க.

உரை. தம்முடையனவல்ல: ஆயுதங்கள் தாருகாவனத்து முனிவர்களாலனுப்பப்பெற்றன; "பலவெண்பணி யவையுஞ்சிலர் விடுதந்தன பண்டே" (தக்க. 449) என்பது இங்கே அறியற்பாலது. லோகத்து வத்துக்களெல்லாம் பஞ்சபூத சமவாயம்: "நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும், கலந்த மயக்க முலக மாதலின்" (தொல். மரபு. அக.) சமவாயம் - கூட்டம்.

453. உரை. எருது தருமரூபமென்பது, 'இது தர்மரூபமாய்...... இருத்தல்', 'தர்மரூப ரிஷப வாகனம்' (தக்க. 634,689-உரை), "ஊறி

லாத் தநுமந் சேவாய்'' (திருக்குறு. தக்கன் வேள்விச். கூஉ) என்பவற்றாலும் அறியப்படும்.

455. மூ. வகை - வகுத்தல், சொல்லுதல்.

456. இதுமுதல் 469-ஆம்தாழிசை முடியத் தேவர்கள் தம்முடைய படைகளுடன் அணிவகுத்துவருதல் கூறப்படும்.

இதில் வருணன் வருகை சொல்லப்படுகின்றது.

457. இதில் அக்கினியின் வரவு கூறப்படுகின்றது.

மூ. அடைய-முற்றும்.

உரை. ஆகாசத்துச்சோதி மண்டலம் - துருவ சக்கரம். சக்கரவர்த்திகள் - கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர்; 'இப்பாட்டுக் கவிச்சக்கரவர்த்திகள் வாக்கல்லவென்பாருமுளர்' என்பர்பின்; தக்க 536-உரை.

நம்பிகாளியார்: இவர் மூதந்துலோத்துங்கசோழன் காலத்தில் இருந்த ஒருபுலவர்; இவர் நெற்குன்றவாணமுதலியாரென்ற பிரபுவைப்பாடிப் பரிசுபெறச் சென்றபோது, அவர் புறத்தே சென்றிருந்தமையின், அவர் தாதி புலவருக்குரிய உபசாரங்களைச் செய்து சிலபரிசளித்தாள். பின்வந்த நெற்குன்றவாணமுதலியார் உவந்து இன்னும் பலவற்றை வழங்கினார். இது, "பன்னுந் தமிழ்க்கவன் மாமனைத் தாதி பரிசளிப்ப, முன்னம்பி காளிக்கு நெற்குன்ற வாண முதலியென்போன், பின்னுஞ் சிலபல பொன்னுங் கொடுத்துத்தன் பேர்நிறுத்த, மன்னுந் தமிழு முரைத்தா னவன் றொண்டை மண்டலமே" (அஉ) என்னும் தொண்டைமண்டலசதகச் செய்யுளால் அறியப்படுகிறது; "கற்குங் கவிவல்லை யாதவர் கோனம்பி காளிக்கியாம், விற்கும் பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும், பொற்குன்ற மும்புகழ்க் கங்கா நதியும் பொதியமும்போ, னெற்குன் றமுநம் மரபுமெந் நாளு நிலைநிற்கவே" என்னும் அதன் மேற்கோட்செய்யுளால், நம்பி காளியார் வல்லையென்னும் ஊரினரென்பதும், யாதவ குலத்தினரென்பதும், நெற்குன்றவாண முதலியாரென்பவரிடம் மிக்க பரிசுபெற்றவரென்பதும் தெரிய வரு...

ஒட்டக்கூத்தர் ஆக்கிய சொல்லிற்கு நம்பிகாளியாருடைய ஆக்கச் சொல்லை மேற்கோள் காட்டினமையின் இவ்விருவரும் இணைத்துக்கூறப் படும் பெரும்புலவர்களென்பது விளங்கும்; "கம்பனென் றுங் கும்பனென் றும்" என்ற தனிப்பாடலில், "காளியோட்டக்கூத்தன்" என்று இவ்விருவருடைய பெயர்களும் சேர்த்துச்சொல்லப்பட்டிருத்தல் இதனை வலியுறுத்தும்.

நம்பி காளியார் கடலுக்குப் பெயர் மழுவென்றிட்டது இன்ன நூலின் கண் உள்ளதென்று இப்பொழுது தெரியவில்லை.

458. இதில் வாயுதேவனுடைய வரவு சொல்லப்படுகின்றது.

உரை. விலகுதலென்பதற்கு எறிதலென்று இங்கே பொருளெழுதிய வாறே, "விலகிற் பிழையாச் சூலத்தே", "மாயனூர் விலக" (தக்க. 224, 646) என்ற இடங்களிலும் பொருள்செய்திருக்கின்றனர். விடவி : விடபி யென்னும் வடசொற் சிதைவு ; விடபம் - மரக்கிளை. பிளந்து - பிரித்து.

459. இதில், துவாதசாதித்தர் வருகை கூறப்படுகின்றது.

மூ. தம : அகரம் ஆறும் வேற்றுமைப் பன்மையுருபு ; இது, "போகா தம" (குறள். ௩௭௬), "ஈசனை சாந்து மெருக்கு மணிந்து" (திருச்சிற். ௭௪) என்பவற்றிற்போல நின்றது.

460. சந்திரன் வருகை இதிற் சொல்லப்படுகின்றது.

மூ. குமுதப்பரப்பும் : உம்மை உயர்வுசிறப்பு. அறைகூறல் - போர அழைத்தல்.

461. இதிற் சொல்லப்படுவது ஏகாதசருத்திரர் வருகை.

மூ. குடுமி - தலை. செருவிற்கு உருத்து எதிர்வர். சில - சின்மையை யுடைய ; சின்மை - சிறுமை. முத்தெருத்தர் - முதுமையையுடைய எரு துகளையுடையவர் ; "மூந்தெருத் தெற்றியே", "மூந்தெருத்துப் பேய்." தக்க. 580, 789.

உரை. நிக்கிரகம் - அழித்தல். மகாதேவர் வாகனம் இளமைநீங்காத தென்பது, "இளையாதுமின்றிச், சுமக்கின்ற பிள்ளைவெள் ளேறு" (காரைக். திருவிரட்டை ௧௧), "மழவிடைமேல் விண்ணவர்க டொழநின் றூன்", "மழவிடை யுடையான்", "பழையமழ விடையேறி", "மழ விடை யுகைத்துச் சென்றார்", "மழவிடைமேல்", "மழவிடையார்", "வெற்றி மழவிடை வீரட்டர்" (பெரிய. மனுநீதி. ௪௫, எறிபத்த. ௧, மானக்கஞ்சாற. ௩௧, அரிவாட்டாய. ௨௧, ஆனாய. ௪௦, திருநா. ௪அ, ௧௩௫), "மூவா வேநதும்" (தனிப். 'மேற்பார்க்க.') என்பவற்றாலும் அறியப்படும்.

462. இத்தாழிசையிற் குபேரன் வருகை கூறப்படுகின்றது.

உரை. வைசிரவணன் - விச்சிரவமுனிவருடைய மகன் ; குபேரன்.

463. இத்தாழிசையிற் கூறப்படுவது யமனுடைய வருகை.

உரை. ஆருணகாண்டம் : வேதத்திற் சூரியனுடைய தோத்திரமாக வுள்ள ஒரு பகுதி.

464. இதில் மேகங்கள் படையாக வந்தமை சொல்லப்படுகிறது.

உரை. ஊசிவேர் - மிகச்சிறியவேர்.

465. இதில் மலைகள் அணிவகுத்துவந்தமை கூறப்படுகின்றது. மலைகளும் போர்செய்தமை 484-ஆம் தாழிசையால் விளங்கும்.

466. மூ. வனதுர்க்கம் - காட்டரண். பாகை: பாகம் என்ற வட சொல்லின் சிதைவு; "முகபாகை." தக்க. 3.

உரை. முன்னம் என்றது 464-ஆம் தாழிசையை. இங்கே கூறப்பட்ட மூன்றரணங்களும், "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடு முடைய தரண்" (குறள். எசஉ) என்பதிலும் வந்துள்ளன. ஒன்றல்லவை பலவென்பது தமிழ்நடை: "ஒன்றல் லவைபல தமிழ்நடை வடநூ, லிரண்டல் லவைபல வென்றிசி னோரே." யா. கா. மேற்.

467. இதில், துவாதசாதித்தர் படையெழுச்சி சொல்லப்படுகின்றது.

மூ. சோதி ஆறிரு பதிற்றுநூறு: "சூரியர்கள் பன்னிருவர் பன்னிரண்டாயிரஞ் சுடரோடுஞ் சூழ்வருவரே" (தக்க. 78.) அத்தம் - ஹஸ்தம் என்ற வடசொல்லின் திரிபு. வர்க்கத்வாதசாதியர்: "வர்க்கலோக கோடி." தக்க. 469.

உரை. கடுப்பு - வேகம்.

468.. அட்டலோக பாலகர் படையெழுச்சி இதிற் கூறப்படுகின்றது.

மூ. கார்முகாசனியர் - கார்முக அசனியர்; கார்முகம் - வில். ஆவநாழிகை - அம்பறுத்தூணி.

உரை. பிறகு - முதுகில்.

469. வருணராசன் தன்வாகனமாகிய மச்சராசனோடு வருதல் இத் தாழிசையிற் சொல்லப்படுகின்றது.

மூ. ஊழியெரி முத்தனீல மோலியென: "எரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை" (அகநா. கடவுள். க0), "ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை." புறநா. ருக: க.

உரை. ஆலமும்......கடலோடும் சம்பந்தமுடையனவெனவுணர்க: 284-ஆம் தாழிசையில், 'அமிர்து கடைந்தது லவணசமுத்திரத்தெனவுணர்க' என்பதற்குக் காட்டிய மேற்கோள்களுள் இவ்விடத்திற்கு ஏற்றன கொள்க.

470. இந்திரன் ஆயுதபாணியாய் யானையையூர்ந்துவருதல் இதிற் சொல்லப்படுகின்றது.

471. திருமால் தம்முடைய சேனையை ஏவுதல் இதிற் சொல்லப் படுகின்றது.

உரை. சேனைபதி யாழ்வார் - விஷ்வக்சேனர்.

472. இதிற் பிரமா சேனைகளுடன் போருக்கெழுதல் சொல்லப்படுகின்றது.

473. இதுமுதல் 510-ஆம் தாழிசைமுடிய வீரபத்திரதேவருடைய படைகள் யுத்தஞ்செய்து தேவர்களை அழித்தல் சொல்லப்படும்.

மூ. மண்டி - மிக்குச்சென்று : "மண்டமர் கடந்தநின் வென்று டக லத்து." மூநூ. உஎஉ.

474. மூ. அருக்ககனப்பரப்பு - அருவமாகிய ஆகாயப்பரப்பு; 'ஆகாயம் தனக்கு வடிவின்றென்னுந் தன்மை' (மதுரை. ௬எஅ, ந - உரை.) ககனப் பரப்புடையப் புயத்துற விட்டடைத்தே : "வானமும்......தாருமே யவன் பெரிய தோள்களால்" (கம்ப. மராமராப். அ0), "அடல்செய் திண்புய மெண்டிசா வெளிமுக மடைப்ப" (திருக்குறு. தக்கன் வேள்வி யழிந்த. ௧௧.) பிழப்பொளி - பிழம்பு ஒளி.

உரை. மச்சியத்துக்குச்சலம் போலவும் : "பெருநீ ரறச்சிறு மீன் றுவண் டாங்கு" (திருவா. நீத்தல். உ௬) ; "பங்கயப் பாசடைப் பாய்தடநீயப் படர்தடத்துச், செங்கய லன்றே கருங்கயற் கண்ணித் திருநுதலே" (திருச்சிற். உ0ரு) ; "நீருள வெனினுள மீனும்", "வானீர் சுண்டி மண்ணற வற்றி மறுகுற்ற, மீனே யென்ன" (கம்ப. நகர்நீங்கு. கடு௬, தைல மாட்டு. ௬௪.) எளியோர்க்கு ஈசுவரன் போலவும் : "அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்" (மூநூ. உஎக), "எளியார் வலியா மிறைவா" (பெரிய. எறிபத்த. க௬), "எளியரை வலியர் வாட்டின் வலியரை யிறைநீர் வைப்பி, னெளியறத் தெய்வம் வாட்டு மெனுமுறை" (காஞ்சிப். கடவுள்.); 'ஏழைப்பங்காளன்' என்ற பழமொழியும் இங்கே கருதத்தக்கது. பலம் செயலான இடம் : "சிறைநலமுஞ் சீரு மிலரெனினு மாந்த, ருறைநிலத்தோ டொட்ட லரிது" (குறள். ௪௯௯.) சிங்கநாதம் - சிங்கம்போன்ற கர்ச்சனை; 510-ஆம்தாழிசையிற் சிங்கநாதம் செய்தல் கூறப்படும் ; "சிங்கமென்னு மாறெழுந்து சிங்கநாத முஞ்செய்தான்" (வி. பா. வாரணாவத. ௬௧); சிங்க நாதமென்னும் ஊதுகருவி வேறு.

475. மூ. இதனால் வடமுகாக்கினியும் ஊழித்தீயும் வெவ்வேறென்று தெரிகின்றது.

476. சுக்கிர பிரகஸ்பதிகளைப் பூதகணங்கள் அழித்தல் இதிற்கூறப்படுகின்றது.

உரை. வெள்ளியும் பொன்னும் என்பன முறையே சுக்கிரனுக்கும் பிரகஸ்பதிக்கும் பெயரென்றல் இங்கே அறியற்பாலது. எனவே அசுரரும் ......ஒக்க யுத்தஞ்செய்தார் : 248-ஆம்தாழிசையில், வேள்வியில் அவிப் பாகம் உண்ணலாமென்று அசுரர்களும் வந்தார்கள் என்று கூறியிருப்பது காண்க.

477. அசுரர்களை அழித்தல் இதிற்கூறப்படும்.

பூ. புறத்திகிரி : திகிரிப்புறம்.

உரை. மலையும் மலையைச்சார்ந்தஇடமும் குறிஞ்சி : "வரையே சுரமே புறவே பழனந், திரையே யவையவை சேர்தரு மிடனே, வெனவீ ரைவகைத் தலையிய னிலமே." நம்பி. சூ. க.

478. கருடனையும் நாகங்களையும் அழித்தல் இதிற்சொல்லப்படும்.

பூ. கொதித்து உவணம் கொழு பரி எனப்பிரிக்க. குமைத்தல் - வருத்துதல் : "கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்." திருநா. தே.

479. இதிற் பூதகணங்கள் பாதாளலோகத்திற் புகுந்து செய்த செயல் கூறப்படுகின்றது.

பூ. நாகலோகத்தில் அமுதமுண்டென்பதை, 362-ஆம் தாழிசையாலும் அதன் விசேடக்குறிப்பாலும் அறியலாகும்.

உரை. திரளை : "திரளை கையிலுண்பவரும்." திருஞா. தே.

480. அரக்கர்களையும் வித்தியாதரர்களையும் அழித்தல் இதிற் கூறப்படும்.

பூ. அழுக்கு : "பொறியிலா வழுக்கை யோம்பி" (திருநா. தே.), "அழுக்கடை யாம லாண்டுகொண் டருள்பவன்." திருவா. கீர்த்தி.

482. சூரியனுடைய வெம்மையையும் சோதியையும் அழித்தல் இதிற் கூறப்படும்.

பூ. பனிப்ரபை : "பனிச்சுடர்." தக்க. 485.

483. இதில் வசுக்களையும் ஏகாதசருத்திரர்களையும் அவர்களுடைய வாகனங்களையும் தடிதல் சொல்லப்படுகின்றது.

பூ. பசுக்கள் : "பழியஞ்சான் வாழும் பசுவும்." திரிகடுகம், எக.

484. மலைகளையும் நட்சத்திரங்களையும் பொருது அவித்தல் இங்கே கூறப்படும்.

மலைகளும் யுத்தம் செய்ய அணிவகுத்து வந்தனவென்பது 465-ஆம் தாழிசையாலும் அறியப்படும்.

பூ. உடுத்தொடை : "இரண்டுடுத் தொடைகொல்." தக்க. 420.

485. இதில், சூரியனுடைய குதிரைகளின் கால்களைக் குறைத்து, அவன் பற்களைப் பறித்தமை சொல்லப்படுகிறது.

பூ. பனிப்பகையை......பற்பறித்தே : "அருக்கர்தம்.........மற்றை முப்பதிற் றிரண்டு பல்லும் வீழ்த்தினன்." காஞ்சிப். தக்கீச. நஎ.

486. திக்குயானைகளையும் திக்குப்பாலகர்களையும் துணித்தலும், பிரமாவின் தலைகளைத் தறித்தலும் இதிற் சொல்லப்படும்.

மூ. அடிக்கழுத்தடையத்.........தறித்தே: "அடிக்கழுத்தி னெடுஞ் சிரத்தை யரிவ ராலோ." கலிங்கத்துப். கஎ.

487. இதில், சந்திரனைத் தேய்த்ததும் அக்கினிதேவன் கைகளைத் துணித்ததும் கூறப்படும்.

மூ. நிழற்கடவுட் சுடர்த்தொகையைத் திரைத்துநிலத் தரைத்தே: "சந்திரனைத் தேய்த்தருளி" (திருவா.), "வழுவு மிந்துவைச் சினந்து தேய்த்து." காஞ்சிப். தக்கீச. ௩எ.

தழற்கடவுட்டடக்கைகளைத் தறித்து: "எரியதொரு கைதறித்த விறைவர்" (தே.), "செந்தீக் கடவுடன் காதலஞ் செற்றும்" (கோயிற் பிரசாதம், ௩க), "வன்னி நாவினொ டெழுகரந் துணித்து." காஞ்சிப். தக்கீச. ௩எ.

உரை. அக்கினிதேவனுக்குக் கைகள் ஏழென்பது வேதத்திற்கண்டது. மழுவைப் பொறித்து மாகேசுவரனுக்குகை: மாகேசுவரராக்குவதற்குச் சூலத்தைப் பொறித்தலன்றி மழுவையும் பொறித்தல் பண்டைக் காலத்து வழக்கு; 367-ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க.

488. இதிற் குயிலாகப் பறந்துசென்ற இந்திரனுடைய சிறைகளைப் பறித்தலும் வசிட்டமுனிவரிடமிருந்த காமதேனுவைப் பறித்தலும் சொல்லப்படும்.

இதன் முதலடியின் பொருள், 44 - ஆம் தாழிசையாலும் அதன் உரையாலும் நன்கு விளங்கும்.

மூ. இனத்தமரர்க் கிறைக்குயிலைப் பிடித்திறகைப் பறித்தே: "கறையடிப்பெருங் களிற்றொருடுஞ் சுழற்றலுங் கலங்கிப்,பறவை யின்குயி லுருக்கொடு வாசவன் பறந்தான், மறைபு காதுவின் மறைதலு மழுவினுன் மலையைச், சிறை யரிந்தவன் சிறையையு மரிந்தனன் செய்யோன்" (திருக்குற். தக்கன் வேள்வியழித்த. சச.) அசட்டு வசிட்டன்: "அசட்டர்க ளைவரை" (கம்ப. திருவவதாரப். எஎ), "அசட்டுநக்கர்" (திருப். குறித்தமணிப்.), "சளத்திற் பிணிபட் டசட்டுக்கிரியைக்குள்." கந்தரலங். எ.

489. இதன் கருத்து அகத்தியனைப் பொதியின்மலையிலடைத்துப் புலத்தியனைத் தகைந்தனர் என்பது.

மூ. அகத்திய புலத்தியர்களிருவரும் ஒருங்கே கூறப்படும் வழக்கு, 40 - ஆம் தாழிசை உரை, குறிப்பு முதலியவற்றால் விளங்கும்; "தகையுளவகத்தியன் புலத்தியன்" (வி. பா. அருச்சுனன் தவநிலைச். கசஎ.) தமிழ்ப் பொதியில்: "தமிழ்க்குன்று." தக்க. 539.

உரை. பொதியின்மலை புலவர்களிருப்பிடம்: "தென்றமிழ்நாட் டகன் பொதியிற் றிருமுனிவன் றமிழ்ச்சங்கஞ் சேர்கிற் பீரே, லென்றுமவ

ணுறைவிடமாம் ” (கம்ப. நாடவிட்ட. ௯௧.) புலத்தியன் ராட்சசரைப் பெறுமவனென்பது, “ புலத்தியன்றன் வழிப்போந்து பொல்லா வொழுக்க மில்லாத, வலத்து முனிவிச் சிரவாவுக் காக்கி வயிற்றி னிடைத்தோன்றிக், கொலைக்கை யரக்கர் ”, “ இந்த மா திராவண னுதியா மரக்கர், முந்தை யோரெலாம் புலத்தியன்வழி ” (உத்தர. திருவோலக்க. ௨௨, புலத்தியப். ௨௯) என்பவற்றாற் புலப்படும்.

490. யமன் கொடியைக் கைப்பற்றலும் பகனென்னுஞ் சூரிய னுடைய கண்ணைப்பறித்தலும் இதிற் கூறப்படுஞ் செய்திகள்.

உரை. எருமை காரானெனப்படுவதனாலும் மூவினங்களிலொன்றாத லாலும், ‘ இடபசாதியோடு ஒத்து ஒவ்வாமாத்திரம் ’ என்றார்போலும்.

491. வருணன் கரங்களைத் தளைத்தலும், அவன் வாகனமாகிய மக ரத்தைக்கடித்தலும் இத்தாழிசையிற் சொல்லப்படும்.

மூ. கயிறென்றது வருணன் பாசத்தை; வருணனுக்குப் பாசமுண்மை, “ பாசம் வீசுங் குடதிசைப்பேய் ” (தக்க. 786), “ வருணன்றன் கயிறு ” (கம்ப. பஞ்சசேனு. ௧௭) என்பவற்றாலும் பெறப்படும். முத்துப்பிறக்கும் இடங்களிற் சுறாவும் ஒன்றென்பது இங்கே அறியத்தக்கது.

492. மலைகளைத்தகர்த்தலும் கற்பகச்சோலையை எரித்தலும் இங்கே கூறப்படுகின்றன.

மூ. அடுத்தகுலப்பொருப்பு : மலைகளும் போர்செய்ய வந்தனவென் பது 465-ஆம் தாழிசையிற் கூறப்பட்டது.

493. கடல்களைப் பூதங்கள் குடித்தன ; மேருவைச் சிதைத்தன வென்பது இதன்கருத்து.

மூ. சிலப்பரசு : சிலம்பு அரசு ; சிலம்பு - மலை. மகாமேருவையும் மலை யரசாகக் கூறும் வழக்குண்மை, “ வரைக்கு வேந்தா யிருக்கின்ற வெரி பொன் மேரு ”, “ வரைகளுக் கரசே யெந்தை கைவரி சிலையே. ” திருவிளை. மேருவைச். ௧௦, ௨௪.

உரை. ஐந்தாம் வேற்றுமை ஒப்பின்கண் வந்தது : தொல். வேற்றுமை. சூ. ௧௬, சே. ந. உரை. தேவர்களிருப்பான சிகரங்கள் : “ தெய்வத வரையே மேலைத் தேவரா லயமே ” (திருவிளை. மேருவைச். ௨௪); “ சுரா லயமே மேரு. ” சூடாமணி. ௫ : ௧௩.

494. இதுமுதல் 499-ஆம் தாழிசை முடியத் தேவர்களின் வாகன முதலியவற்றை அழித்தல் சொல்லப்படும்.

அக்கினியின் வாகனத்தைப் பற்றினாரென்பது இதன்கருத்து.

மூ. பாவகன்றகர் : “ செந்தீக்கடவுளு மேல் கொளுந்தகர். ” தக்க. 582.

உரை. அழித்துச் சொன்னவாறு: 'அடாவென்பது அழித்துரை' என்பர் பின்; தக்க. 508 - உரை.

495. இரவியின் குதிரைகளையும் சந்திரனுள் விளங்கும் மானையும் அழித்தல் இதிற் கூறப்படும்.

மூ. ஏழுமான்: தக்க. 467-ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க; "ஏழூர் பிறைஞ்சி" (குறிஞ்சி. உகடு) என்பதும், 'ஞாயிறு ஏழுகுதிரை பூண்ட தேரையேறிப் பகற்பொழுது போம்படி தாழ்ந்து' என்னும் அதன் உரையும் இங்கே அறியற்பாலன. உள்வாழுமான்: சந்திரனிடத்துள்ள களங்கத்தை மானென்பது நூன்மரபு; "அஞ்சமோ, மண்ணிற் புலியைமதி மான்." நன்னெறி, உக.

496. இதிற் சொல்லப்படுவது யாளிமுகப்பூதங்கள் திக்கயங்களின் கொம்புகளை ஒடித்து அடிக்குருத்தையுண்ணும் செயல்.

மூ. குருகுதற்றி: "குருகுவெண் டாளி கோடுபெய்த் துண்டன." யா. கா. மேற்.

497. தருமன் வாகனங்களைக் குமைத்தல் இதிற் கூறப்படும்.

உரை. எருமைமுகப் பசாசகணங்கள்: விலங்குமுகப் பசாசகணங்களும் உளவென்பது, "புலிமு கத்தன கலைமுகத் தனவயப் புலிமா, றெலிமு கத்தன கொய்யுளை யுத்தரி முகத்த, கலைமு கத்தன கரடியின் முகத்தன கணங்கள்" (திருக்குற். தக்கன் வேள்வியழித்த. கஎ) என்பதனாலறியலாகும்.

498. இதில் நிருதியின் பேயூர்தியை உவ்வுதல் கூறப்படும்.

மூ. நிருதிக்கு வாகனம் பேயென்பது தக்க. 685, 785 - ஆம் தாழிசைகளாலும் உணரப்படும்.

499. வருணன் வாகனங்களை மடக்குதல் இதிற் கூறப்படும்.

500. இதுமுதல் 504 - ஆம்தாழிசைமுடிய முறையே திருமகள், உரோகிணி, சசி, சுவாகா முதலியவர்களையும், தக்கன் பெண்களையும், அவன் மனைவியையும் பூதகணங்கள்வருத்துதல் சொல்லப்படும்.

மூ. மார்வம்: "மார்விற்றூர் கோலி மழை" (பு. வெ. உ0௪), "மார்விற் றிருவிற் பொலிமாலையினன்" (கம்ப. சரபங்க. க.) மாதெளவியென்றது திருமகளை.

501. மூ. உரோணி: "ஒண்ணிற வுரோணி யோடு", "ஒண்ணிற வுரோணி யூர்ந்த" (சீவக. ககஅ, ௬உ0), "நறுநுத லுரோணி" (பாகவதம், திருவவதார. உடு.) அளகம் - முன்னுச்சிமயிர்.

உரை. சூட்டு - நெற்றிப்பட்டம்.

502. உரை. சசி - இந்திராணி. சுவாகா - அக்கினியின் தேவி.

503. உரை. பெயரினுந் தொழிலினும் பிரிந்த ஆணொழிமிகுசொல் : தொல். கிளவி. சூ. ௫௦.

504. மூ. மாமி : "அன்புடைய மாமனு மாமியுநீ" (தே.), "தவமுறு நம்ம மாமி" (திருவால. ௬ : ௫), "நனிமாமிவர" (கடம்பவன. இலீலாசங்கிரக. ௩௧), "மாமிக்குக் கடலேழும் வழங்கினீர்" (மதுரைக்கலம். ௬௦.) யாகபன்னியென்றது தக்கன் மனைவியை ; பன்னி - பத்தினி.

உரை. காதிற் செருகும் பூ : இதனைக் கன்னாவதஞ்சமென்றுங் கூறுவர் ; "மருவிய செவிம லர்ப்பூ மன்னுகன் னவ தஞ்சம்." சூடாமணி. ௭ : ௨அ.

505. இதுமுதல் 509 - ஆம் தாழிசைமுடிய யாகத்தின் உறுப்புக்களாகிய யூபத்தம்பம், அக்கினி, பருந்து, மடாக்கள் முதலியவைகளை அழித்தல் கூறப்படும்.

உரை. எடுத்துக்கைநீட்டுவான் : 88 - ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க. யூபஸ்தம்பமே கோலாகப் பசுவையடித்தார்கள்: 'வேல் கோலாக அடித்துக் கொண்டுவந்த பசுத்திரள்.' மதுரை. ௬௧௦ - ௧௨. ந, உரை.

506. மூ. வெய்ய : வெம்மை - விருப்பம்.

507. உரை. பருந்துதானென்றது பறக்கும் பருந்தை. யாகத்துக்குச் செய்த பருந்து : "எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்" (புறநா. ௨௨௪ : அ) என்பதற்கு, 'பருந்து விழுங்குவதாகச் செய்யப்பட்ட இடத்துநாட்டிய யூபத்தம்பம்' என்றெழுதியவுரையும், "சுடுமணற் கலுழ னுகச் சுருதியின் படியே கோட்டி, வடிவுறச் சமைத்த சாலை" (வி. பா. இராசசூய. ௩௧) என்பதும் இங்கே அறியத்தக்கன ; இதனைக் கருடசயனமென்பர்.

508. மூ. மடா - மிடா : "அனந்தகோடிமடா", "அநேக கோடி மடா." தக்க. ௭௬௬, ௭௬அ.

உரை. அடா என்பது அழித்துரை : "இவ்வழி நேர்மினடா", "காவடா விதுவல்லையேல்", "யாதடாவென் றியம்பினன்", "எங்கடா போவது." கம்ப. கரன்வதை. ௧அ, ௧௬௧, மாரீசன் வதை. ௬௬, சடாயுவுயிர்நீத்த. அ௭.

509. மூ. சமைக்க - அழிக்க; தக்க. 398-ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க.

510. இதில், தக்கனது யாகத்துக்கு வாராமல் மேகபதத்துக்கு மேலேயிருந்த தேவர்கள் மயங்கிவீழ்தல் சொல்லப்படுகின்றது.

உரை. சிங்கநாதம் : 474 ஆம் தாழிசை உரைக்குறிப்பைப்பார்க்க.

511. திருமால் முதலிய தேவர்களுக்கு வீரபத்திரதேவர் மீள உயிர் கொடுத்துப் போர்தொடங்கச் செய்வித்தாரென்பது இதன் கருத்து.

மூ. குன்ற வில்லி - மேருமலையை வில்லாக உடையவன்; மலையை இருப்பிடமாக உடையவனெனலுமாம்; "குன்ற வில்லவன் பால்" வி-பா. அருச் தவநிலை. உடு.

உரை. கூத்தாட்டுக் காண்டல்: "யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு வானாகி" (திருவா.) ஆதித்தன்......ஒக்க நிற்குமாப்போல - சூரியன் நடுப்பகலில் எல்லாருடைய உச்சிக்கும் நேரே இருத்தல்போல.

512. இது முதல், 520 - ஆம் தாழிசைவரையில் பூதகணங்களும் தேவர்படைகளும் பொருதல் கூறப்படும்.

513. மூ. தேவருக்குப் படையாக மேகங்களும் வந்தமை 464 - ஆம் தாழிசையால் உணரப்படும்.

514. மூ. அப்புக்கடையைக் கடையென்றது நாமைகதேசம்.

515. உரை. துன்னூசி - கலப்பையின் உறுப்புக்களுள் ஒன்று; 'கொழுச் சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறு' (தொல். சிறப். பு. ந.), "அசைவிறிண் கொழுச்செல் லாறே துன்னூசி யழகிற் செல்லும்." தியாகராச. நாட். 99.

516. மூ. தோலுந் தோலுந் துவைத்தன: "தோலொடு தோல்க டகைந்தன" (பெரிய. ஏனாதி. கஅ); துவைத்தன - முழங்கின; "துவைத் தம்பிற் றூளைதோன்றுவ" (புறநா. ச: ரு); துவையென்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்த முற்று.

518. மூ. கடுப்ப - கோபித்துப்பொர; போல எனினும் ஆம்.

520. மூ. குடையுங் குடையுங் கொழித்தன - அரசர்களும் அரசர்களுந் தம்முட் சினத்தால் முழங்கினார்கள்.

522. மூ. எழிலியொடசனியே: ஒடு அசைநிலை; "விதைக்குறு வட்டி போதொடு பொதுள" (குறுந். கருரு) என்பது போல. எழிலி அசனிஅற்றன என இயைக்க.

526. மூ. சிலைகொல் பொருப்பு - சிலையைக்கொல்லும் பொருப்பு.

530. மூ. முரசம் - வெற்றிமுரசு. முரசத்திற்கு முகில் உவமை; "உருமிடி முரசமொடு" (முருகு. கஉக); "முரசதிர்ந் தன்ன வின்குர லேற்றொடு, நிரைசெல னிவப்பிற் கொண்மூ" (குறிஞ்சிப். சக-ருo); "இன்னிசை முரசி னியங்கி..........சென்மழை தழுவ" (நற். கசுஎ : கo - கஉ); "கடிப்பிகு முரசின் முழங்கி" (குறுந். உஎo : ங); "முரசதிர் பவை போன் முழங்கி யிடிபயிற்றி" (பரி. உஉ : ச); "கொண்மூ..........,

போர்ப்புறு முரசி னிரங்கி", "இடியுமிழ் முரசம் பொருகளத் தியம்ப" (அகநா. கஅஅ : க-ங, ஙடுச : உ); "படுமழை யுருமி னிரங்கு முரசு", "விழுக்கடிப் பறைந்த முழுக்குரன் முரசம்............அரவெறி யுருமி னுர றுபு சிலைப்ப", "கொண்மூ வாக........முரசுமுழக் காக", "உருமிசை முரசமுழக்கென விசைப்ப" (புறநா. நடுo : ச, நசுசு : க - ங, நசுக : உ-டு, நஎந : க); "மூரிவான முழங்கிவாய் விட்ட தொப்ப, வதிர்குரன் முரசம்" (சீவக. டுசங); "உருமி னிடிமுர சார்ப்ப" (முத்.); "முழவ திர மழையென் றஞ்சி." திருஞா. தே.

531. மூ. பாகலம்: "வித்ரஜாஃ வாகமொரஃ கு கம்பை வடு வதொஷஃ" என்பது வடமொழி வைத்தியநூலொன்றிற் காணப் படுவது.

உரை. மாவென்றது......பெயர்: 'மாவென்றது குதிரையையும் யானையையும்.' தக்க. 534-உரை.

532. மூ. கொள்ளிவாய் நெடும்பேய்: "கொள்ளிவாய்ப் பேயை யேவினன்", "கொள்ளிவாய்ப் பேயை மாட்டி" (தக்க. 660, 746); "கொள்ளி நக்க பகுவாய பேய்கள்" (திருஞா. தே.); "சுழலு மழல்விழிக் கொள்ளிவாய்ப் பேய்." திருவாலங்காட்டுமூத்த. எ.

உரை. இரண்டு சேடியில் வெள்ளியம்பெருமலை: 19-ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க.

533. மூ. விபஞ்சி - யாழ்; இஃது ஆகுபெயராய்க் கந்தருவலோகத் திற்காயிற்று.

534. மூ. தாக்கணங்கு - தீண்டி வருத்தும் தெய்வம்; "மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய" (அகநா. எ : ச), "மூப்புடை முதுமைய தாக்கணங் குடைய." மணி. ந : டுஎ.

உரை. சித்தாசுவம் - சித்த அசுவம்; சித்தர்களுடைய குதிரை. யட் சேபம்-யட்சஇபம்; யட்சர்களுடைய யானை. ஹர்ஷசரிதம்: இது பட்ட பாணரென்ற ஸம்ஸ்கிருதகவி இயற்றிய காவியம். யட்சவாசம் - யட்சர் கள் இருக்கை. ஆலிற் கோயிலிலுள்ள மகாகாளி: "அகில லோகநாயகி யமர்ந்ததோ ரொப்பருங் கடவு ளாலமுண்டு." தக்க. 139.

535. யுத்தத்தில் இறந்த தேவர்களைப் பிரமன் படைத்தல் இதிற் கூறப்படுகின்றது.

536. மூ. பாழ்: "பாழ்படு திசையெலாம் மருண்டு பார்க்குமே" (நைடதம், அன்னத்தைக் கண்ணுற்ற. எக.) பாழ் வெள்ளிக்குன்று: "விஞ் சையமன்னர்பாழ் வெள்ளி வெற்பு." தக்க. 371.

உரை. பொன்படுமலை......குன்று: 'ஏமகூடம் இந்திரன் விடாயாற்றி மலை' என்றார் முன்னும்; தக்க. 419 - உரை.

இப்பாட்டிலுள்ள சொற்பொருளமைதிகள் அடுத்த பாட்டின் முதலடியிலமைந்துள்ளமையின், 'இப்பாட்டு......உளர்' என்றார்.

537. இதுமுதல் 545 - ஆம் தாழிசைமுடியப் பூதகணங்கள் தங்கள் செயல்களினால் முறையே இந்திரன், வேல், அகத்தியன்கை, கண்ணன், துவாதசாதித்தர், வருணன், தேவாசுரர், பரந்தாமன் முதலியவர்களை வென்றமை கூறப்படும்.

இத்தாழிசையிற் பூதகணங்களின் நகப்பெருமை கூறப்படும்.

மூ. விழுக்குன்று - விழுமம் குன்று; விழுமம் - சிறப்பு; தொல். உரி. சூ. ருரு.

538. இதனாலும் அடுத்த தாழிசையாலும் பூதகணங்களுடைய கைகளின் பெருமை கூறப்படுகிறது.

மூ. விழுத்து ஓகையான் - வீழச்செய்து மகிழ்ச்சியினால். வென்வேல் - வெற்றியையுடைய வேல்.

539. மூ. குமிழ்க்கும் - தோன்றும்; "நெடுங்கண் குமிழ்த்தெழு வெம்பனி" (பெருங். க. சசு: உஉஎ - ச); 'குமிழ்த்தல் என்னுந்தொழில்' (தொல். புள்ளி. சூ. கக. ந-உரை.) பேர்யாழ் - பெரியயாழ்; பேர்யாழென்றே ஒருவகை யாழ் உண்டு; அஃது இருபத்தொரு நரம்புகளை உடையதென்பர்; சிலப். ப: க00.

540. மூ. சிறைக்கைகள்: "நெஞ்சுகலங்கி அஞ்சிறையான காமர் துணைக்கரம், கொண்டு தம்வயி றெற்றியெற்றி விளிப்பபோன்றன கோழியே" (கம்ப. கைகேசி. சஎ), "தைய றுயர்க்குத் தரியாது வெஞ்சிறகாங், கையால் வயிறலைத்து.........கூவினவே கோழிக் குலம்" (நள. கலிதொடர்.) என்பவற்றில், சிறைகளைக் கைகளாக உருவகம் செய்திருத்தல் இங்கே கருதத்தக்கது. மல்லர்க்கடந்தான் - கண்ணன்; "மல்லர்க் கடந்தா னிறம்போன் றிருண்டெழுந்து." ஐந்திணையைம்பது, க.

இதில், பூதகணங்களின் மற்போர்வன்மை கூறப்பட்டது.

541. மூ, அடற்பூதமொன்றேழை......விழ......வென்றே: "இச்சிலை கிடக்கமலை யேழையு மிறுசேறு" (கம்ப. கோலங்காண். எசு.) 'விலங்கற்குழாமாரி' என்றதனால், இந்திரன் மலையை மழையாகச் சொரிந்தானென்று தெரிகின்றது.

இதனாற் பூதகணங்களின் தோட்பெருமை கூறப்பட்டது.

542. இதனால், பூதகணங்களுடைய கண்களின் பெருமை சொல்லப்படும்; 415 - ஆம் தாழிசையையும் பார்க்க.

543. இதில், பூதகணங்களின் வாய்ப்பெருமை கூறப்படும்.

மூ. கைந்நாகமே மேயு மாநாகம்: "மைந்துமலி சினத்த களிறுமத னழிக்கும், துஞ்சுமரங் கடுக்கு மாசுணம்" (மலைபடு. உகூ0 - கூக), "களிறு பாந்தட் பட்டென", "களிறகப் படுத்த பெருஞ்சின மாசுணம்" (நற். கஎ: அ, உகூக: கூ), "யானை, விளிபடத் துழவு மகல்வாய்ப் பாந்தள்" (அகநா. கூஅ), "பரிய களிற்றை யரவு விழுங்கி மழுங்க" (திருஞா. தே.), "களிறென்று பெரிய மாசுணம்......பெயர்தரு பிருதிவெம் பெருமானே" (பெரியதிரு. க. ரு: க0), "மதக்கத மாவடங்கு பேழ்வயிற்றரவு", "இடி கொள் வேழத்தை யெயிற்றொடு மெடுத்துடன் விழுங்கு, கடிய மாசுணம்" (கம்ப. சித்திரகூட. ச, ரு), "பெரிய பாந்தள், மறங்கிளர் மான யானை வயிற்றின வாக வாய்சோர்ந், துறங்கின." ஷை. சேதுபந்தனப். உ0.

உரை. குளகு-விலங்கின் தழையுணவு; "மறிகுள குண்டன்ன மன்று மகிழ்ச்சி." நாலடி. கசு.

544. மூ. சாடி - தாழி. துழாய் - துழாவி. பராவின்மை - அபகீர்த்தி.

546. மூ. துணிப்பப் பணிப்ப எனக்கூட்டுக.

547. உரை. வேண்டற்பாடு - ஒருதலையாகவேண்டுவது; தக்க. 43, 506, 554, 562, 704-உரைகள்.

548. மூ. வாய்வயின் - வாயினிடத்தே.

உரை. நீராயினவாறே - நீராயினவுடனே; 'கண்டவாறே' (தக்க. 185-உரை) என்றதைப்போல. வாமிகள் - வாமாசாரத்தை யுடையவர்கள்; இவர்கள் கௌலர்களென்றுங் கூறப்படுவார்கள். சுரை - கள். சுரையை...... பிராமணர்......கூசக்கூச உமிழ்ந்தவகை: அந்தணர் கள்ளைத் தீண்டா ரென்பதும் தீண்டக்கூசுவரென்பதும் அறியத்தக்கன; "நிந்தனை நறவ மூம் நெறியி லூன்களுந், தந்தன கண்டிலன்.........அந்தண ரில்லெனப் பொலிந்த தாமரோ" (கம்ப. வீடணன். க00), 'பார்ப்பனியுங் கள்ளுண் ணாள்; பார்ப்பாருங் கள்ளுண்ணார்.' நன். சூ. ருருஎ - மயிலை.

549. மூ. கங்கை பூதகணங்களின் சார்பானதென்று தெரிகிறது.

மலைகொன்று பொன்னிக்கு வழிகண்ட கண்டன்: "செய்கை யரிய களவழிப்பா முன்செய்த, பொய்கை யொருவனாற் போந்தாமோ - சைய, மலைச்சிறைதீர் வாட்கண்டன் வெள்ளணிநாள் வாழ்த்திக், கொலைச்சிறை தீர் வேந்துக் குழாம்" (தொல். புறத். சூ. ருசு - ந. மேற்.) என்னும் பழம் பாட்டினுள், "சைய, மலைச்சிறைதீர் வாட்கண்டன்" என்றிருப்பது காண்க.

550. இதுமுதல் 556-ஆம் தாழிசைவரை முறையே புராரி, துருவாசர், கடல், வடவைத்தீ, கருடன், இராகுகேதுக்கள், கண்ணன்

முதலியவர்களைப் பூதபசாசுகள் தங்கள் செய்கைகளால் வென்றமை கூறப்படும்.

இதிற் பூதங்களின் விழிப்பெருமை கூறப்பட்டது.

551. மூ. மூ : "தங்கிய மாதவத் தின்றழல் வேள்வியி னின்றெழுந்த, சிங்கமு நீள்புலி யுஞ்செழு மால்கரி யோடலறப், பொங்கிய போர்புரிந்து பிளந்துரி போர்த்ததென்னே, செங்கயல் பாய்கழ னித்திரு நாகேச் சரத்தானே" (சுந்தர. தே.) படுத்து - விரித்து. ஏகாசம் - மேற்போர்வை.

உரை. இருஞ்சுதல் : 630-ஆம் தாழிசை உரையைப்பார்க்க.

552. மூ. தபோவாரி கோதம் : "அரமடந்தையர் கற்பக நவநிதி யமிர்தம், சுரபி வாம்பரி மதமலை முதலிய தொடக்கற், றுருபெரும் பொருளின்றியே யுவரிபுக் கொளிப்ப." (கம்ப. அகலிகை. சஅ.) கோதம்: "கோதம் படாதி" (தந்தை. உகச.) சதுர்த்தந்தி - நான்கு தந்தத்தை யுடையது.

553. மூ. செல் நெருப்பு - இடியாகிய நெருப்பு. கனல் - வடவைத்தீ.

554. மூ. மட்டித்து - தேய்த்து ; தக்க. 540-உரை.

உரை. திட்டிவிஷம் : தக்க. 645-உரை.

555. மூ. சீலம் - இயல்பு.

உரை. சந்திரனுக்கு விமானமல்லது தேரில்லை: "செவ்வழிக் கதிரோ னென்றுந் தேரின்மே லன்றி வாரான், வெவ்வழித் தெனினுந் திங்கள் விமானத்தின் மேல தென்றூர்" (கம்ப. மாரீசன்வதை. ககஉ), "மதி கேழ்கிளருமானத், தட்டிரவி தேரொடு தகர்ந்துமுரி வாக" (கந்த. தகரேறு. எ.) 'ராகுகேதுக்களுக்கு விடுவதும் பற்றுவதுமுண்டு' என்றது, சூரிய சந்திர கிரகணங்கள் யாண்டுதோறும் நிகழ்தல் பற்றி.

556. மூ. மக்களென்றது பூதகணங்களை. 'முலைக்கண்களாலாவி யுண்ட பொய்ம்மாயனார் செய்தி', பாகவதம், பூதனையைக் கொன்ற அத்தியாயத்தால் அறியப்படும்.

557. இது முதல் 566 - ஆம் தாழிசைமுடியத் தேவர்களைப் பூதகணங்கள் முற்றும் அழித்தலும், அவர்கள் யாவரும் இறந்து பேய்களாதலும் கூறப்படும்.

மூ. எரிதீயென்றது பசித்தீயை ; "மொய்த்தபூதம் வயிற்றெரி மூண்டவே", "பெருதரத்தீ." தக்க. 568, 570.

558. மூ. அரிது இன்று போரெனப் பிரிக்க. அமிர்தோடு மமிர் துண்டெழுங் கரி : "அமுதில் வந்த வயிராபதம்." தக்க. 664.

559. மூ. தேவென்பதோர் பேரில்லை ; "வானரப் பேரு மாளும்." கம்ப. கிட்கிந்தை. கூ.

560. மூ. பரந்து அரனார்படை. அரனார்படை ஊழியிலாழியை யொத்தது : தக்க. 428. உம்பர்கள் பூதமும் வேதா ளங்களு மாயே புகுதவே : "அமரரா யுடலுண் டார்க ளலகையா யுடலுண் பாராய்ச், சமருளார் படைகண் மாய்ந்து தம்பிரான் படையாய்ச் சூழ." திருக்குற். தக்கன் வேள்வியழிந்த. ௫௧.

561. மூ. இப்பாட்டோடு, "உலந்தாருடல் கடலோடுற உலவாவுடலுற்றார், அலந்தார்நிசி சராரமென விமையோரொடு மார்த்தார்" (கம்ப. கரன்வதை. ௬௩) என்பது ஒப்பு நோக்கத்தக்கது. சிந்தடிவன்குறளாலலகைக் குலம் : "தேரை நடப்பன போற்குறள் சிந்தினொ, டோரு நடந்தன", "கொட்டுப் பிடிபோலும் கூனுங் குறளா மை, விட்டு நடப்பனபோற் சிந்தும் விளைந்து" (சீவக. ௬௩௩, ௨௭௯௮); "குறளுஞ் சிந்து மிதந்தன" (சூளா. சுயம்வர. ௰௨௪); "சிந்தொடு குறளுங் கூனும்.........சுற்ற." கம்ப. கோலங்காண். ௨௩.

இத்தாழிசையில் யாப்பின் அங்கமாகிய சிந்தடி குறளடி என்னும் பெயர்கள் தொனிப்பது காண்க.

உரை. 'முதற் பெயராய்ப் பொருள் படுவது' என்றது, குறுமையை உணர்த்தும் குறளென்னும் பண்புப்பெயர் பூதத்திற்காயினமையின். குறளாலலகைக்குலம்......... என்றலுமாம் : இப்பொருள் கொள்ளுமிடத்து ஆலென்பதை அசையாகக் கொள்க.

562. மூ. ஆடாவிழியிணை காகமிருந்து பறிப்பன : "கருகட னஞ்சுறு கண்மணி காகமுங் கவர்ந்த", "அரக்கன்விழி காகங்களுண்டபோது" (கம்ப. கரன்வதை. ௮௮, சூளாமணிப். ௧௫.) ஆடாவிழியிணையென்றார், தேவர்களாதலின்.

563. உரை. ஆள் - வீரபுருஷர் : "சேனையாளென", "பொய்யா ளையுமாளும்" (தக்க. 504, 597) ; "ஆழியும் புரவியு மாளும்", "ஆளிரண்டு நூறுள" (கம்ப. கரன்வதை. ௧௦௫, ௧௩௪.) தேர்ப்பேய் - தேர்வடிவங்கொண்டபேய்.

566. உரை. இஃது இரும்பு பொன்னானகை; ரசவிசேஷம் : 'சித்தரசம்படக் காணி கோடியைப் பேதித்தாற் போலச் சுவர்ண மயமாய்த்து.' தக்க. 217 - உரை.

567. இதில் இறந்த தேவர்களைப் பிரமா இரண்டாமுறை படைப்பது சொல்லப்படும்.

568. இது முதல் 590 - ஆம் தாழிசைமுடிய வானவர் நான்காமுறை வீரபத்திரர் படையொடு பொருது அழிதல் கூறப்படும்.

மூ. பித்த வானவ ரெங்கே பிழைப்பது : "பின்னை யாரவர் கையிற் பிழைப்பரே" (தக்க. 590.) வயிற்றெரி - உதராக்கினியாகிய பசித்தீ; தக்க. 557 - ஆம் தாழிசையையுங் குறிப்பையும் பார்க்க.

உரை. அவிர்ப்பாக முண்கைக்குப் பித்தேறிச் செத்துச் செத்துப் பிறந்த வானவர்கள் : "சாவமுன் றட்டக்கன் வேள்வித் தகர்தின்று." திருவாசகம்.

569. உரை. பிறந்த வழிக்கூறலான ஆகுபெயர் : தொல். வேற்றுமைமயங்கு. சூ. கூக. பிரச்சுவலிப்பிக்க - பிரகாசிக்கச் செய்ய ; தக்க. 334, 637 - உரைகள்.

570. மூ. உதரத்தீ - சாடராக்கினி.

571. மூ. எழுபொழிலும் : தக்க. 70 - ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க.

உரை. புகப்படுத்த - புகும்படி செய்ய.

572. மூ. இரிந்தது : முற்றெச்சம்.

574. எண்டிசை வேழங்களையும் பூதகணங்கள் விழுங்கின.

575. மூ. வெந்து : வேவ என்ற வினையெச்சத்திரிபு.

576. உரை. சாரூபம் - சிவசாரூபம்.

577. மூ. வேற்றுத் தேவரெழுவர் - அக்கினியொழிந்த ஏனைத் திசைத்தேவர்கள்.

578. உரை. 'இதுவும் சாரூப்பியபதம்' என்றதனால், 'ஆலத்தீ' என்றது கழுத்திலுள்ள ஆலகால விஷாக்கினியையெனக் கொள்க.

579. உரை. ஏனை........என்ப : இஃது, "ஏனையிரண்டு நெடுமுதல் குறுகும்" (தொல். உருபு சூ. கசு) என்றதன் பாடபேதமாகவேனும் அவிநய முதலிய பழைய இலக்கண நூல்களிலொன்றிலுள்ள சூத்திரமாகவேனும் இருத்தல் கூடுமென்று தோற்றுகிறது.

580. மூ. முத்தெருது : தக்க. 461 - ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க.

581. மூ. தேரோன் - சூரியன். திங்க டண்மையிற் றேரோ னவிந்தனன் : தக்க. 482. தங்கவென்றது பன்னிரண்டு சூரியர்களை.

582. மூ. கால் - காற்று. கால் கொளுந்துமச் செந்திக்கடவுள் : வாயு சகாயனென்று அக்கினி தேவனுக்கு ஒருபெயருண்டு. தகர் - ஆட்டுக் கிடாய் ; இது தகர்த்தலால் வந்தபெயர் ; தகர்த்தல் - முட்டுதல்.

583. மூ. இடியெரி - இடியும் எரியும். ஆறு : ஆகுபெயர்.

584. மூ. கட்கதிர் - கண்ணாகிய கதிர்.

உரை. சூரிய காந்தாதி - சூரிய காந்தம், சந்திரகாந்தம், அயக்காந்தம்.

585. மூ. வெப்புத்தீ - ஜ்வராக்கினி; "வெப்பு நோயுங் குருவுந் தொடர." சிலப். உரைபெறுகட்டுரை. க. ப. ௩௦.

உரை. அது மூன்றுகாலையுடைத்து: சுரதேவதைக்கு மூன்று காலுண்டென்பர். இதனைச் சிவாலயங்களிலுள்ள சுரதேவதை வடிவங்களால் அறியலாகும்.

586. மூ. முனிகணத்தர்: "பக்க மார்முனி கணத்தர் தம்மொடுங் கூடி நின்றனன் பத்மயோனியே" (தக்க. 472) தம்-பூதகணங்களுடைய.

587. உரை. 'பெய்துகொள்க' என்றது திரையென்னுஞ் சொல்லைக் குறித்ததெனக் கொள்க. இதனை இசையெச்சமென்பர்.

588. மூ. காட்டுத்தீ தாவாக்கினியென வழங்கும்.

591. இதில், பிரமர் பதின்மரும் வெந்ததேவர்களை மூன்றுமுறை படைத்தல் கூறப்படும்.

மூ. பாவகாரர் - பாவத்தைச் செய்பவர். இச்சொல் பாவகாரிகளெனவும் வழங்கும்: "முதல்வனைச் சிந்தியாதவப், பாவகாரிகள்" (பெரியாழ். ச. ௪:௧), "பாவ காரிய ரெய்தொணுக் கழுகு சூழ் பறம்பும்." காஞ்சிப்.

592. இதுமுதல், 596-ஆம் தாழிசைமுடியப் பத்திரகாளியின் படையெழுதலும் அப்படைகளின் பெருமையும் கூறப்படும்.

இதனால், பத்திரகாளியின் படைகள் வீரபத்திரதேவர் படைகளிலும் மேன்மையுடையனவென்று தெரிகின்றது.

593. மூ. யோகினிகள், சம்மினிகள், சாகினிகள்: இவர்களைப்பற்றிய செய்திகள், முறையே 87, 88, 89-ஆம் தாழிசைகளின் குறிப்புக்களால் அறியலாகும்.

உரை. கர்த்தரிகள் - தலைவிகள். ஆறண சடாங்கமான மகாதந்திரம்: 'ஷடங்கதேவதாயுக்தா' என்பது லலிதாஸஹஸ்ரநாமத்தில் ௩அ௬-ஆம் திருநாமம்.

594. மூ. ஆள்: 563-ஆம் தாழிசைக்குறிப்பைப் பார்க்க; "ஆளழி வாங்கி." சிலப். உ௬ : உ௩௩.

595. மூ. இருக்கும்படி - இருக்கும் விதம். 'போழிகள்' என்றதனால் சக்கரவாளங்கள் பலவென்பது பெறப்படும்; 'அனந்தசக்கரவாளமுண்டென்னுங் கதையால்.' தக்க. 138-உரை.

உரை. ஆழிமோதிரம் - ஒருவகை மோதிரம்; "வாழிமணி யாழி" (கம்ப. சூளா.) கூறவிருப்பேமென்றது........நயமுமாம்: இக்கருத்துடன், 221 - ஆம் தாழிசையில் ஆளுடைய பிள்ளையார் கதையைச் சொன்ன நாமகளைத் தேவி இருக்கச்செய்ததைப் பற்றிக் கூறியது ஒப்பிடற்பாலது.

597. இது முதல் 603 - ஆம் தாழிசைவரை பத்திரகாளியின் பொய்யுருவப் படைகளுடன் தேவர்களுடைய மெய்ப்படைகள் பொருதழிதல் கூறப்படும்.

உரை. ஆதிதீபம் - ஓர் அணி; இது முதனிலைத்தீவகமெனவும் வழங்கப்படும்; தண்டி. சூ. ௩அ.

598. மூ. விஞ்சையர் - வித்தியாதரர்.

உரை. அரிவம்சம்: ஒருவடமொழிநூல்.

600. உரை. விளக்கு அவிதொழில்: அவிதற்கு முன் விளக்குப் படர்ந்தெரிந்து பின் அவிதலைக் குறித்துநின்றது; "அவியுறு சுடர் போலே." திருப். திருவிடைமருதூர்.

602. மூ. ஆயுத வாயுமிழ் பொங்கழல்: "செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன." கம்ப. குகப். ௧௪.

உரை. 'உமிழ்தல்' என்பதற்கு, 'புறப்பட விடுதல்' என்று இங்கே உரையெழுதியவாறே 110 - ஆம் தாழிசையிலும் எழுதியிருக்கின்றார். இயல்புகணம் - உயிர்க்கணம், மென்கணம், இடைக்கணம்.

603. உரை. தந்ததென்பது படர்க்கையிலும் செல்லும்: தொல். கிளவி. சூ. ௨அ, இளம். ந.

604. இதுமுதல் 612-ஆம் தாழிசை முடியச் சகோரம், சாதகம், கபோதம், கிளி, மயில், கின்னரம், சக்கரவாகம், கருடன் முதலிய உருவங்களை முறையே கொண்ட பசாசகணங்கள் தேவர்களுடன் பொருது அவர்களை அழித்தமை கூறப்படும்.

உரை. உங்கள்...........தமிழன்று: உங்களென்று வருவது தமிழிற் பழைய வழக்கன்று.

605. மூ. பால்நிலா: நிலவிற்குப் பாலை உவமை கூறுதல் கவிமரபு; "பங்குசெறிந் தன்ன பல்கதி ரிடையிடைப், பான்முகந் தன்ன பசுவெண் ணிலவின்" (நற். ௧௩௪ : ௧-௨); "பாலெனப் பரத்தரு நிலவின் மாலை" (அகநா. ௨௯௧ : ௧); "பானிலா வெண்கதிர் பாவைமேற் சொரிய, வேனிற் றிங்களும் வேண்டுதி யென்றே" (சிலப். ௧௬ : ௨எ-அ); "ஆசற விளங்கிய வந்தீந் தண்கதிர், வெள்ளிவெண் குடத்துப் பால்சொரி வது போல், கள்ளவிழ் பூம்பொழி லிடையிடைச் சொரிய" (மணி. ௬ : ௬-அ); "தீம்பால் கதிர்மணிக் குடத்தி னேந்தி, வீழ்தாச் சொரிவ தேபோல் விளங்கொளித் திங்கட் புத்தேள், சூழிருட் டொழுதி மூழ்கத் தீங்கதிர் சொரிந்து", "பானி லாக்கதிர் பாய்தரு பள்ளியே" (சீவக. ௧௯௪௧, ௨௬௬௧); "திங்கள் சொரிநிலவு சேர்வெள்ளி வள்ளத்துப், பைங்கிள்ளை பாலென்று வாய்மடுப்ப" (தண்டி. சூ. ௯௪. மேற்.); "உக்கபால் புரை

நிலா", "தெரிந்தொளிர் திங்கள்வெண் குடத்தி ஞற்றிரை, புரிந்துயர் பாற்கடன் முகந்து பூரிவான், சொரிந்ததே யாமெனத் துள்ளி மீதெடும், விரிந்தது வெண்ணிலா மேலுங் கீழுமே", "சொரிந்தபா லொத்தது நில வின் ரேற்றமே", "பாலுகுத் தாலென நிலவு பாய்ந்ததால்" (கம்ப. உண்டாட்டு. அ, ஊர்தேடு. ருடு, ருசு, இலங்கைகேள்வி. அ.) சகோரங் கள் நிலவை உண்ணும் இயல்பின ; "அல்லார் மதிய நிலவுண் சகோரம்" (திருவேங்கைக்கோவை, கஅ.) பசுங்கதிர்க் கொத்து : "பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே." திருச்சிற். சுஎ.

உரை. பசுமை......இளமையிற்சென்றது : "பெற்ற பச்சிளங் குழவி" (பாகவதம், திருவவதார. கஎ.) நிலாமுக்கி - நிலாவை உண்பது.

606. மூ. வானம்பாடி மழைத்துளிகளை உண்ணும் இயல்பினையுடை யது. இங்கே இவை பேயினமாதலின் மேகங்களையே உண்டன ; "தற் பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி" (பட். ந-ச), "தண்டா மரைச்சுனையிற் சாதகமும்......விண்டாரை நாடுகின்ற வேங்கடமே." (திரு வேங்கடமாலை, கூஎ.) கும்போதரம் : எண்வகைப் பூதகண நாதருள், கும் போதரர் என்ற பெயருடையவர் ஒருவர் உண்டு ; "கும்போதராதிகள்" (தக்க. 547), "கும்போதரன் முதுகின்மேற் சரணம் வைத்து" (திருவிளை. திருமணப். கoஉ), "மருவடிசி லுண்டுவெரு பொழுது கும்போ தரனை யொத்து வருவர் மாதோ." சித்திரச்சத்திரப். சுக.

608. மூ. பதங்கர் வெங்கதிர் பன்னிரண்டாயிரம் : தக்க. 78-ஆம் தாழிசைக் குறிப்பைப்பார்க்க. கதிர் : சிலேடை.

609. மூ. பூதநாயகர் - படைத்தலைவர். உரகேசர் - உரக ஈசர் ; நாகராசாக்கள்.

610. மூ. முன்னரம்பினு முத்தர் மிடற்றினும்......நெஞ்சங் கிழிக் கவே : "யாழான் மிடற்றால் வளைக்குதும் யாமென்பார்" (குலோத். உலா. உகசு), "வீணைக் ககப்பட வேழ மிடற்றுக்கு, மாணைப் பெருமா ளகப்பட" (இராசராச. உசுக.) கின்னரம் இசையறிவுடைய தென்பதை, தக்க. 151-ஆம் தாழிசைக் குறிப்பினுல் உணர்க.

உரை. சத்தசுரம் - ஸட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்ச மம், தைவதம், நிஷாதம் ; "சரிகம பதநிப் பாடற் றண்டுதை வருசெங் கையோன்" வி. பா. இந்திரப்பிரத்தச். சஉ.

தமிழால் எழு நரம்பு : குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். அவர் மிடறுபோலும் இசையைக் காட்டவல்லது : "கீதம் பாடியை" (பெருந்தேவபாணி, கஙு.) ஏமப்புள் - பொன்னிறப்பறவை. காட்ட வீணையும் சரீர வீணையும் ஒக்கக்காட்டின - வீணையிசையும் மிடற்

றப் பாடலும் ஒத்து நிற்கப்பாடின என்றபடி ; " நரம்பின் முரலு நயம்வரு முரற்சி " (மதுரைக். உகஎ), " யாழ்......இன்குரல் விறலியர்" (மலைபடு. நிடு௪ - ௬), " இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடி ஞளோ; நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந்தார் " (சீவக. ௬௫௪), " அங்கைய மிடறுங் கூட்டி நரம்பளைந் தமுத மூறும், மங்கையர் பாடல் " (கம்ப. வரைக்காட்சி. ௩௧), " யார்க்கும், நசைதரு நரம்பு கண்ட மொற் றுமை நயங்கொண் டார்ப்ப." திருவிளை. விறகுவிற்ற. உ௮.

611. மூ. வெள்ளம் - மிகுதி; " ஆளமர் வெள்ளம் பெருகின்." பு. வே. ௩௨.

உரை. அலகு - பறவைகளின் மூக்கு ; " துணையன்றில் வாயலகு வாங்கித், தணக்க " குலோத். உலா.

612. மூ. இந்திரனைத் திருடனென்றது அகலிகைபாற் களவிற் சென்றமையும் தக்கன் யாகத்திற் குயிலாக மறைந்து சென்றமையும் பிறவு மாகிய கரவுடைமையால்.

613. இதுமுதல் 617-தாழிசை வரையில் பத்திரகாளி, தன் வாளி யையேவி எல்லாவற்றையும் அழித்தல் சொல்லப்படும்.

மூ. வாளி - அம்பு.

614. மூ. உதவ - வாய்ப்பட.

615. மூ. பூமிவட்டம் - பூசக்ரம் ; " நிலநேமி " (தக்க. 2), " விடாது விழுங்குவெண் டிங்களை யெங்களை வெண்ணிலவாற், சுடாது விடில்விடுந் தொல்புவி வட்டமுஞ் சூழ்கடலும், வடாதுந் தெனுதும் வலம்புரித் தாருமை தோய்வரையுங், குடாதுங் குணது முடையான் கொடிமிசைக் கோளரவே " (துரியோதனன் கலம்பகம்.) எரிவட்டம் - அக்கினிமண்டலம். நேமிவட்டம் - கடல்.

616. மூ. கொன்றது - கொன்ற சீரை.

உரை. பத்துப்பிரமர்களும் படைத்தமை 591-ஆம் தாழிசையிற் கூறப்பட்டது. மாயாதேவி - தேவியின் படைத்தலைவி ; பத்திரகாளி ; 618-ஆம் தாழிசையைப் பார்க்க. பூஷித்தது - புகழ்ந்தது. சீரம் - சீர்ண மென்பதன் சிதைவு. திருத்தி - திருப்தி.

617. மூ. புரத்ரயம் : " பொங்குபுரத்ரயம். " குலோத். பிள்ளைத்.

உரை. கடாப்புகுதின் - விஞ்வெழுந்தால்.

618. இவ்வாறு பத்திரகாளி கணங்களும் அவளம்பும் தேவர்களை யெல்லாம் அழிக்கவும் பின்னும் தேவர் படை இருப்பதைக் கண்ட வீர பத்திரதேவர் அவ்வாறு நிற்பதற்குக் காரணம் என்னென்று வினவி யருளினரென்பது கருத்து.

மூ. ஐயர் - வீரபத்திர தேவர் ; " ஐயன்...ரவிபோ லெழுந்தருளும்" " ஐயர் கைத்தொடி ", " ஐயர் விடுபெற்றமே. " தக்க. 434, 645, 648.

உரை. பொருதவள் மாயாதேவி : 616-ஆம் தாழிசை உரையில், " மாயாதேவி அவையிற்றைக் கொன்றபடி " என்றார். இந்திரஞாலம் - இந்திர சாலம்.

619. இதில், பூதகணங்கள் வீரபத்திர தேவருக்குத் தேவர் படை பின்னும் இருத்தற்குக் காரணங்கூறுதல் சொல்லப்படுகிறது.

620. இதுமுதல் 634-ஆம் தாழிசையிறுதியாக வீரபத்திரர் சினந்து போர்க்கோலம் கொள்ளுதல் சொல்லப்படும்.

621. மூ. ஞாண் - போர், போர்க்களம் ; இதனடியாகப் பிறந்தது ஞாட்பென்பது.

622. மூ. காடுபோகுசடாமுடி : 61-ஆம் தாழிசைக்குறிப்பைப் பார்க்க. அபிடேகம் - முடி ; " அபிடேகச் சொக்கன். " திருவால. கக : ச.

உரை. அண்டகபாடம் : " அண்டகபாடக்கூழ். " தக்க. 770.

623. மூ. வேதவீணை யென்பது பிரமவீணை, உருத்திரவீணை, சுந் தரவீணை, பிருகதி, கலாவதி, மகதி, கச்சபி யென்பன போன்றதொரு வீணை விசேடம்.

உரை. வீரப்பெண்ணைத் திருக்கலியாணம் பண்ணுகை : வேடர்களை வென்ற சீவகனது செயலைக் கூறுகையில், ' வீரமகளைச் சேர்ந்தமை கூறிற்று ' (சீவக. கோவிந்தையாரிலம்பகம் - உரை, இறுதி) என்ற நச்சினார்க்கினியர் வரைந்திருப்பதும், " போர்ச்சயப் பாவையும்......தன் பெருந் தேவிய ராகி யின்புற " (பரகேசரி ராசேந்திர சோழதேவன் மெய்க்கீர்த்தி), "போர்த்தனிப் பூவையும் வதுவையிற் புணர்ந்து" (ஆதிரா ஜேந்திரதேவன் மெய்க்கீர்த்தி), " விளங்குசய மகளை யிளங்கோப் பருவத்து......புதுமணம் புணர்ந்து " (மூதந்தலோத்துங்க சோழதேவன் மெய்க்கீர்த்தி), " புயவரை மீது சயமகள் புணர " (அரிகேசரிதேவன் பராக்கிரம பாண்டியன் மெய்க்கீர்த்தி) எனப்பழைய முடியரசர்களுடைய மெய்க்கீர்த்திகளிற் காணப்படும் பகுதிகளும் இங்கே அறியத்தக்கன. களம்பாடு பொருநர் - போர்க்களம்பாடு பொருநர் ; பொருநர்களுள் இவர் கள் ஒருவகையினர் ; தொல். புறத். சூ. ௩௬. ந. உரை.

624. மூ. புராணநூல் - பழையநூல் ; இங்கே அகத்தியம். விதியாவது, * " செங்களத்து மறங்கருதிப், பைந்தும்பை தலைமலைந்தன்று " (பு.

* அகத்திய சூத்திரம் இக்காலத்து அகப்படாமையால் அதன் சார்பு நூல் விதியே இங்குக் காட்டலாயிற்று.

வெ. கஉஎ) என்பது ; "சூடவென்று வகுத்ததும்பை" என்பர் பின்னும்; தக்க. 639.

625. மூ. கச்சியிற் சூதமென்றது ஸ்ரீ காஞ்சீபுரத்திற் சிவபெருமானுக்கு நீழல் செய்யும் தெய்வீகமான மாமரத்தை. "சூடாத், தளிராத சூதம்" (குலோத். உலா. கஉச - ரு) என்றதனால் மாந்தளிரை யணிதல் பண்டைய வழக்கமென்பது அறியப்படுகின்றது. சீதளபல்லவம் - தண்ணியதளிர். சூதசீதள பல்லவங் கனலிற் கலித்து: "அவரோ வாரார் தான்வந் தன்றே, பொரிகான் மாஞ்சினை புதைய, வேரிகா விளந்தளி ரீனும் பொழுதே" (ஐங். கூசக), "சீதப் புனலுண் டேரியைக் காலுஞ், சூதப் பொழில்சூழ் சேற்றுத் துறையே" (சுந்தா. தே.), "வளரிளஞ் சோலை மாந்தளிர்செந், தீயினே ரரும்பு பெரும்பறப் புலியூர்த் திருவளர் திருச்சிற்றம்பலமே" (கருவூர்த்தேவர் திருவிசைப்பா), "கிடங்கெரி வடவையிற் றளிர்முக மீன்று,......நின்றமேற் பகைமா" (கல். முருகக்கடவுள் துதி), "பைந்தடந் தாளான் முன்னம் பருகிய புனலை மீளச், செந்தழ லாக்கி யந்தண் சினைதொறுங் காட்டுஞ் சீரான், முந்திய வசோகு சூத முதலிய தருக்க ளெல்லா, மிந்திர சாலம் வல்லோ ரியற்கையி னியற்று மாலோ" (வி. பா. சம்பவச். கூ), "தென்னன் றமிழி னுடன்பிறந்த சிறுகா லரும்பத் தீயரும்புந், தேமா" (மீனுட்சியம்மைபிள்ளைத். தாலப். க.) உச்சியிற்பனிவீசுகண்ணி: திங்களைக் கண்ணியாகக் கூறுமரபு 332 - ஆம் தாழிசையின் உரையாலும் அதன் விசேடக்குறிப்பாலும் விளங்கும்; "பெருகிய புனல்விரவிய பிறைக் கண்ணியர்", "செஞ்சடை மதியக் கண்ணி யான்", "கூனற் றிங்கட் குறுங்கண்ணி" (திருஞா. தே.); "பிறையிளங் கண்ணியி னானை", "வெண்மதியக் கண்ணி விகிர்தா போற்றி" (திருநா. தே.); "புனிற்றிள வான் பிறைக்கண்ணிப் புனித ரீந்தார்", "கோட்டிளந்தண் பிறைக்கண்ணிப் புனிதனூர்." பாசவதை, உஉக, உகூக.

626. மூ. வட்டம் - உருளை. 'ஈறில் காலம்' என்றது கொண்டே, 'தான் அழியாமை நிற்றல் கொள்க; அது காலமென்கிற பொருள்' என்று முன் (தக்க. 337-உரை) உரையிட்டனர் போலும்.

627. மூ. காணி - உரிமை. முட்கோல் - தாற்றுக்கோல்; இது கூர்முள்ளென்றும் வழங்கும். வலஞ்செய்தேறி: ஊர்தியின் மேலேறுபவர் அதனைத் தொழுதலும் வலஞ் செய்தலும் மரபு: "குஞ்சரந் தொழுது வெய்முதற் றாசங்கொண் டேறினன்" (சீவக. கசுoஉ), 'யானை யேறுவாரும் தொழுதல் இயல்பு' (ஷை. ந-உரை), "சோதி முத்தின் சிவிகை சூழ் வந்துபார், மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின், றாதியா ரரு ளாதலி னஞ்செழுத், தோதி யேறினு ருய்ய வுலகெலாம்", "ஏற்ற தொண்டரை யண்டர்வெள் ளானையி னெதிர்வலங் கொண்டேற்றி." பெரிய. திருஞா. உகசு, வெள்ளானை. கூச.

உரை. வடிகயிறு - பயிற்றிச் செலுத்தும் கயிறு.

பாரதத்திற் கர்ணபருவத்தில் திரிபுர சங்காரம் கூறப்பட்டுள்ளது.

628. மூ. மாகமேவரும் ஊர் - ஆகாயத்திற் பறந்து திரியும் திரிபுரங்கள். வளைந்ததோர் நாகம் - மேருமலை.

629. மூ. புரங்கொல் அம்பு - திரிபுரத்தைக் கொன்ற அம்பு.

உரை. இங்கே கூறப்பட்ட அம்பின் உறுப்புக்கள், "கல்லானிழற் கீழாயிடர் காவாயென வானோர், செல்லாமொரு தேராயயன் மறைபூட்டிநின் றுய்ப்ப, வல்லாயெரி காற்றீர்க்கரி கோல்வாசுகி நாண்கல், வில்லாலெயி லெய்தானிடம் வீழிம்மிழலையே", "மைம்மருவு மேருவிலு மாசுணநா ணரியெரிகால் வாளியாக, மும்மதிலு நொடியளவிற் பொடிசெய்த முதல்வனிடம் முதுகுன்றமே" (திருஞா. தே.) "மாருதமா லெரிமூன்றும் வாயம் பீர்க்காஞ் சரத்தானே" (திருஞா. தே.) என்பவற்றிலும் கூறப்படுதல் அறியற்பாலது. சாமந்தர்-சேனைத்தலைவர்; "சேனை யோட்டுசாமந்தராகி" (திருவால. ௬௩:௬௬), "எண்ணில் சாமந்தரை வென்றடு தூசி" (வீரராஜேந்திர தேவன் மெய்க்கீர்த்தி.) வெண்பாமாலை-புறப்பொருள் வெண்பாமாலை.

630. மூ. எய்தன - எய்த அம்புகள்.

உரை. செய்ய வேணும் : வேணும் : 291 - ஆம் தாழிசைக் குறிப்பைப்பார்க்க. கிராதவேடம் - வேட்டுவ உருவம். அட்டகாசம் - பெருஞ் சிரிப்பு. சிங்கநாதம் - சிங்ககர்ச்சனை ; 474 - ஆம் தாழிசை உரைக்குறிப்பைப்பார்க்க. சிம்புள் - சரபம். கிழமைபோல யுகங்களும் வருவன போவன : "ஊழியோர் பகலாயோதும் யாண்டெலாம்" கம்ப. உருக்காட்டு. ௭௨.

631. உரை. படைவழக்கம் - படை வழங்குதல். ஜயகோஷம் - வெற்றி முழக்கம். அடுப்பம் - கனம். பிரதித்துவனி - எதிரொலி.

632. மூ. கணிச்சி - மழு.

633. மூ. முன்பு பயந்த வேலை யென்றது உவர்க்கடலை.

உரை. ஒப்பித்தல் - அலங்கரித்தல். பால சந்திரன் பிறந்தது லவண சமுத்திரத்தெனவுணர்க : அமுதங்கடைந்தது லவண சமுத்திரத்திலென்பது தம்முடைய கருத்தாதலின், அமுது கடையுங்காற் பிறந்த சந்திரனையும் உவர்க்கடலிற் பிறந்தவனென உரையாசிரியர் இங்கே எழுதினர் ; 234-ஆம் தாழிசை உரை விசேடக்குறிப்பு முதலியவற்றைப் பார்க்க.

634. மூ. கொடிக்குக் கங்கை உவமை : தக்க. 257-ஆம் தாழிசை, அதன் குறிப்புக்கள் முதலியவற்றைப் பார்க்க ; "மனையிற்பொலி மாக

நெடுங்கொடி மாலை யெய்ப்ப, வினையிற்றிரள் வெள்ளருவித்திர ளேங்கி வீழ'' (கம்ப. கடறாவு. ௫0.) இமயவெற்பு கொடியையெடுத்ததோளுக்கு உவமை.

உரை. விடை தர்மரூபமென்பது, 453-ஆம் தாழிசைக் குறிப்பால் விளங்கும். வெண்கொடி......வெளுத்திருத்தலால் விடையே வெண்ணிற மென்பது இங்கே கொள்ளத்தக்கது ; "வெள்ளைவிடை" (தக்க. 778.) இழிச்ச - இறங்கச்செய்ய. எடுத்துவிட - எழச்செய்ய.

635. இதுமுதல் 668-ஆம் தாழிசை முடியத் தேவர்களுக்கும் ஸ்ரீபூதகணங்களுக்கும் பின்னும் போர்மூண்டதில் தேவர்கள் அழிந்தமை கூறப்படும்.

மூ. இருள் கேடு : வினைத்தொகை.

உரை. சகஸ்ர சட்சு - ஆயிரம் கண்கள். கிரந்தம் - வடமொழி. தொடர்நடைச் செய்யுள் - காவியம் ; இது தொடர்நிலைச்செய்யுளென வும் வழங்கும் ; தண்டி. சூ. ௫.

சடை புனல்கண்டுழி வவ்வும் : "மேகவெள்ளநதி வெள்ள நூறுகென வும்பர் நாயகன் விளம்பினன், மாக வெள்ளநதி கொண்ட தோர்சடை வளைந்து கொண்டதவை வற்றவே.'' தக்க. 652.

637. மூ. வெங்கண் மண்டிலம் - வெம்மையாகிய இடத்தையுடைய மண்டிலம்.

638. மூ. இயம் ஐந்து - தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி யென்னும் கருவிகள் ஐந்து. இறை கொள்ள - தங்குதல் செய்ய.

உரை. ராசபரிச்சின்னங்கள் - அரசர்க்குரிய அடையாளங்கள்.

639. மூ. இதன் கருத்து, வெற்றியைக் கருதிய ஸ்ரீபூதகணங்கள் தும்பை மிலைச்சி வீரபத்திரதேவரை வணங்க, தேவர்களும் தும்பை சூடித் தருக்கி நின்றார்களென்றபடி.

640. மூ. விட்ட......வந்தன - தேவர்கள் பொரவிட்ட வாகனங்க ளெல்லாம் அவர்களையே அழித்துவிட்டு வந்தன ; இக்கருத்து 682-ஆம் தாழிசை முதல் 689-ஆம் தாழிசை முடிய உள்ள இந்நூற் பகுதியில் விளங்குவதைக் காணலாம். தொட்ட......சூழ - தேவர்கள் தொட்ட ஆயுதங்களெல்லாம் அவர்களுடைய கைகளினின்றும் நீங்கி வீரபத்திரர் திருவடியில் வந்து சேர.

641. மூ. வைனதேயன் - வினதையின் மகன் ; கருடன். குடி போக - குடியிருத்தலை நீங்கிப்போக. கூகை - கோட்டான். காகமே யவர் கொடிமிசைக் குடிகொள்ளவே : "கருது வீரின் கொடிமிசைக்

காக்கையின் கணங்கள், பொருது வீழ்வன புலம்புவ நிலம்படப் புரள்வ.'' கம்ப. கரன்வதை. ௭௦.

உரை. உற்பாதம் - பின்வருந் தீங்கைத் தெரிவிக்குங் குறி.

மேற். இருவகையுயர் திணை - மக்கள், தேவர். பறையன்ன விழித்த கண்: "பறைபோல் விழிகட்பேய்", "பறைக்கட் செறுபல் கணப்பேய்" (திருஞா. தே.), "பறைக்காட்டும் குழிவிழிகட் பல்பேய்" (திருநா. தே.), "பறைக்கணெடும் பேய்க்கணம் பாடல் செய்ய" (சுந்தர. தே.), "பறை போல் விழிகட்பேய்" (காரைக். கோயின்மூத்த. க.) கூடு - நெற்கூடு. பெரு மோட்டாள் - பெரிய வயிற்றையுடையவள்; "கறைப்பற் பெரு மோட்டுக் காடுகிழாள்" (தனிப்.) பெண்டாட்டி - பெண்.

642. உரை. தூசி - முன்படை; "தொண்டர் காடுசீ செல்லீர்." திருவா. படையெழுச்சி.

643. மூ. நெடுநாள் நுடங்குவன. புறத்திரண்டுவில்: "எழிலியுந் தனிதனித்திரு தனுவெடுத்தன", "வானில்வந் திட்டவிற்க ளிரண்டு" (தக்க. 159, 160) என்பவற்றால் வானவில் இரண்டென்பது பெறப்படும்; 159-ஆம் தாழிசைக்குறிப்பைப் பார்க்க.

உரை. கொற்றவில் - அரச உரிமைக்குரிய வில்.

644. இதுமுதல் 650-ஆம் தாழிசை முடியத் திருமால் வீரபத்திர ரோடு தன் படைகளை விட்டுப் பொருதலும், அவற்றை வீரபத்திரதேவர் படைகள் அழித்தலும் சொல்லப்படும்.

மூ. செய்மை - சீட்சி, கனன் முராரி - கனன்றமுராரி; வினைத் தொகை. நனைத்ததால் - நனைப்பதற்கு மாத்திரம் போதியதாயிற்று பாற் கடல். இத்தாழிசையின் கருத்தோடு 659-ஆம் தாழிசையை ஒப்பு நோக்குக.

உரை. அடுப்பம் - கனம். தக்க. 631-உரை.

646. மூ. வையமுண்டு தனிதுஞ்சுமால்: தக்க. 148. வையமுண்டு தனிதுஞ்சும்: "உலகையுண்டுறங்குவான்" (தனிப். 'நாவுண்டு'), "உண் டானுறங்க" (சகலகலாவல்லிமாலை.) துஞ்சும் ஆல் - யோக நித்திரை செய்வதற்கிடமாகிய ஆலீமரம். மாயனார் ஆலை வரவிலகவென இயைக்க. நாயனார்: இப்பெயர் சிவபெருமானுக்குத் தனித்து வழங்குவதன்றியும் தலங்களின் பெயர்களோடும் சேர்த்துச் சிலாசாஸனங்களில் வழங்கப்படு கின்றது; "சிராப்பள்ளி மேவிய, நாயனொன நம்வினை நாசமே" (திருஞா. தே.), 'பரசீந்திரமுடைய நாயனார்க்கு' (சுசீந்திரம் சாஸனம், Travancore Archaeological Series, Vol II, Part I, p. 18), 'திருக் குற்றாலமுடைய நாயனார் தேவதானமும்', 'விக்ரம பாண்டீசுவரமுடைய

நாயனுர் தேவதானமும்' (தென்காசிச் சாஸனம், Ibid. Vol. I, p. 91), 'நாயனுர் அழகிய திருவானைக்காவுடைய நாயனுர்' (Ibid. p. 103.) தருமம் பணித்தருளு மாதியால்: "ஆனைமயிருந்த நீழலது" (தக்க. 146); கல்லால மரத்தின் நீழலிலிருந்து சனகாதியர் நால்வருக்கும் அறம் பகர்ந்தனர் சிவபெருமான்; இச்செய்தியே தேவாரம் முதலியவற்றிற் காணப்படுகின்றது; "பொழின்மிகு திருவாலி, னல்லறமுரைத்து", "ஆல நிழற் கீழிருந் தறஞ்சொன்ன வழகனே" (திருஞா. தே.); "மடற்பெரிய வாலின்கீ ழறநால்வர்க் கன்றுரைத்தா னென்கின் றூளால்", "ஆலமர நீழலிருந் தறஞ்சொன் னூரும்" (திருஞா. தே.); "கோல வானிழற் கீழ றம் பகர", "அன்றாலி னிழற்கீ ழறநால்வர்க் கருள்புரிந்து" (சுந்தா. தே.); "அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ." திருவா.

647. மூ. ஆதிவானவன்: "அடிப்பெருங் கடவுள்" என்பர் பின்; தக்க. 656. ஊழிமாருத மிரண்டு பாடும்வா வூடு சென்றதவ னுவணமே: "இமையாத் திசையானை கண்கண் முகிழா வொடுங்க நிறைகால் வழங்கு சிறையான்." கம்ப. நாகபாசப். உசச.

உரை. இயற்பெயர்ப் பின்னர்ச் சுட்டுப்பெயர் வந்தது: தொல். கிளவி. கூ. ௩அ.

உரை. மிருதித்த - இறந்த. களேபரம் - உடம்பு; "களேபரத்தின் பொதியாவது" (திருவிடை - மும்மணி. சு.) சுவாசம் - வெளிவிடும் மூச்சு.

649. மூ. நக்கர் அப்பு அடை சடாடவி.

உரை. மண்ணுணி யென்பது மண்ணையுண்டு மண்ணிற்குள் வாழும் ஒருவகைப் பாம்பு. வாயுசக்தி: பாம்பு வாயுவை ஆகாரமாகக் கொள்ளும் என்பது இங்கே உணரத்தக்கது.

650. மூ. ஆலமொன்று மமுதென்று பண்டமுது செய்யுமையர்: "ஆலத்தி னுலமிர் தாக்கிய கோன்" (திருச்சிற். உள.) பணி - கட்டளை. முடி - கிரீடம்.

651. இதுமுதல் 662 - ஆம் தாழிசைவரை இந்திரன் சினம் மூண்டு வீரபத்திரர்மேல் தன் படைகளை ஏவுதலும் அவையெல்லாவற்றையும் வீரபத்திரதேவர் படைகள் அவித்தலும் கூறப்படும்.

உரை. திருமுடி யறவே அவன் சக்தியற்றது: முடியற்றால் முடியற்ற வன் தன் வலியை இழப்பானென்பது இராவணன் முடியைச் சுக்கிரீவன் தகர்த்ததால் இராவணன் செயலற்றதாலும், உக்கிரகுமாரபாண்டியன் வளையெறிய இந்திரன் முடியிழந்து வலியற்றதாலும் உணரப்படும்.

652. மூ. மேகவெள்ள நதி: "ஆறு தூக்குமம் மேகம்" (தக்க. 583.) மாக வெள்ளநதி கொண்டதோர் சடை: "கதமாக் கங்கை புரயவொர்

